# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"



திருக்கொட்டாரம் ஸ்ரீ ஐராவதீசுவரர் கோயில்
வில்லேந்திய வேலவர்

மாலை 5] சுபகிருது - ஐப்பசி நவம்பர் 1962 [மணி 2

ரதி

சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு.



மன்னார்குடி—இராஜகோபாலசுவாமி கோயில் பாஞ்சராத்திர ஆகமப் பயிற்சி வகுப்பு நிறைவு விழாவில் (14-10-62) ஆணையர் அவர்கள் நற்சான்றிதழ் வழங்குதல்

## நாயன்மார் திருநாட்கள்

| நவம்பர் | ஐப்பசி | |
|---|---|---|
| 10 | 25 | திருமூலர் |
| 11 | 26 | நின்றசீர் நெடுமாறர் |
| 12 | 27 | இடங்கழியார் |
| | கார்த்திகை | |
| 21 | 6 | மெய்ப்பொருளார் |
| 22 | 7 | ஆனாயர் |
| 29 | 14 | மூர்க்கர் |
| 30 | 15 | சிறப்புலி நாயனார் |

## ஆழ்வார் திருநாட்கள்

| நவம்பர் | ஐப்பசி | |
|---|---|---|
| 15 | 30 | கூரம் குலோத்தம தாசர் |
| | கார்த்திகை | |
| 27 | 12 | கோடி கன்னிகாதான தாத்தாச்சாரியார். |

## பொருளடக்கம்




மாலை 5] சுபகிருது ஐப்பசி - நவம்பர் 1962 [மணி 2

# பெரும் பெயர் முருகன்

✦✦✦(✻)✦✦✦

## முன்னுரை.

கந்தர் சஷ்டி விழா இதுபோது (29-10-62 முதல் 3-11-62 வரை) தமிழகம் எங்கணும் சிறப்புற நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. இந்நாட்கள் முருகன் அடியார்களுக்கு மிகவும் புனிதமான நாட்கள். இந்நாட்களில் எத்துணையோ பலர் விரதம் இருந்து, முருகனை வழிபட்டு மகிழ்வார்கள். முருகன் திருக்கோயில்களி லெல்லாம் சஷ்டி விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும். எனவே, முருகனைப் பற்றிய சில கருத்துக்களை ஈண்டு நாம் நினைவுகூர்வது மிகவும் பொருத்தம் ஆகும்.

## முருகனின் தொன்மை:

முருகன் வழிபாடு தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றது. மக்கள் முதன்முதல் தோன்றிய இடம் குமரிக் கண்டமே என்றும், அதன்கண்ணும் குறிஞ்சித்திணைப் பகுதியேயாம் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கும் முற்பட்டதெனக் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழிலக்கணம், முருகனைக் குறிஞ்சித்திணைக்குரிய தெய்வம் என்று குறிப்பிடுகின்றது. இவ்வாற்றால் முருகன் வழிபாடு மிகத் தொன்னெடுங் கால முதலே நிகழ்ந்து வருதல் தெளியப்படும். முருகன் குறிஞ்சி நிலத்திற்குச் சிறப்புரிமையுடைய தெய்வம் என்னும் தொல்காப்பியக் கருத்தினை,

"திருந்தப் புவனங்கள் ஈன்றபொற்
பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில்
ஏறி அறுவர் கொங்கை
விரும்பிக் கடல்அழக் குன்றழச்
சூர்அழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்
என் றோதும் குவலயமே"

என அருணகிரிநாத சுவாமிகள் நயம் சிறப்ப அருளிச் செய்திருத்தல் காணலாம்.

## முருகன் எனும் சொற்பொருள் நலங்கள்.

முருகனின் அருமை பெருமைகள் அளவிடற்பாலன அல்ல. அப்பெருமானது சிறப்புக்களை யெல்லாம் அவனது திருப்பெயர்கள் தாமே நன்கினிது விளக்கும் தகையனவாகத் திகழ்கின்றன. அதுபற்றியே 'அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருகன்' என ஆசிரியர் நக்கீரர் தமது திருமுருகாற்றுப் படையின் கண் குறிப்பிடுவா ராயினர். 'பெரும்பெயர் எனினும், மகாவாக்கியம் எனினும் ஒக்கும்' என்பது சிவஞானபோதப் பேருரை. 'முருகன்' என்னும் சொல், அழகு இளமை மணம் தேன் தெய்வத் தன்மை என்னும் பல பொருள்களைக் குறிக்கும் சிறப்புடையது. ஆசிரியர் நக்கீரர்,

**"மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி"** எனவரும் திருமுருகாற்றுப்படை வரியில், இப்பொருள்களை யெல்லாம் தொகுத்துச் சுட்டி யருளியுள்ளனர். 'முருகு' என்னும் சொல்லுக்கு விழா என்றும் ஒருபொருள் உண்டு. 'முருகயர்ந்து வந்த முதுவாய் வேலவ' என்புழி அப்பொருள் பயின்றுள்ளமை காணலாம். இதனால் முருகன் என்பது 'திருவிழாவுக்குரிய தேவன்' எனவும், பொருள் படும். அண்மைக் காலத்தில் விளங்கிய அருள்பெற்ற சான்றோர் ஆகிய பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்,

"முருகு லாநறிய முருகு
முருகு கோடிஎன முருகு
முருகு மூசுலிக முருகு
முருகு ருதுமன முருகு"

எனத் தாம் இயற்றிய 'திருவலங்கல் திரட்டு' என்னும் நூலின்கண் அந்தாதி மடக்கு என வந்த ஒற்றிலாச் செய்யுள் ஒன்றின்கண், முருகு என்னும் சொல்லுக்குரிய அரிய பொருள்களை யெல்லாம் திறம்பட அமைத்து நயம் பொருந்த விளக்கியுள்ளமை அறிந்து மகிழற் பாலது.

"திருவிழாவில் உலாவும் நல்ல இளமைப் பருவம் உடைய முருகு என்னும் திருப்பெயர் உடையாய்! (என்னைக்) கொள்வாயாக! என்று மலர்களின் மணமும் அழகும் மொய்க்கின்ற உலகத்திலே துன்பத்தின் உருகுகின்ற பிறப்பானது இனியும் பொருந்தாமல், மனமே! உருகுவாயாக."

என்பது மேற்குறித்த சிறந்த செய்யுளின் திரண்ட பொருள். முருகன் அழகிற் சிறந்தோன் ஆதலை,

"ஆயிர கோடி காமர்
அழகெலாம் திரண்டொன் றாக
மேயின எனினும், செவ்வேள்
விமலமாம் சரணம் தன்னின்
தூயநல் எழிலுக் காற்றா
தென்றிடின், இனைய தோல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
உவமையார் வகுக்க வல்லார்?"

என்றும்; முருகன் இளமைநலம் மிக்கவன் என்பதனை,

"கோலமா மஞ்ஞை தன்னிற்
குலவிய குமரன் தன்னைப்
பாலன்என் றிருந்தேன்! அந்நாட்
பரிசிவை யுணர்ந்தி லேன்யான்!
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்தி,இம் மூர்த்தி அன்றே?"

என்றும் வரும் கந்தபுராணச் செய்யுள்களால் ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியர் கவினுறத் தெருட்டி யிருத்தல் காணலாம். இவற்றாலேயே, அப்பெருமானின் ஒப்புயர்வற்ற தெய்வப் பெற்றிமைகள் எல்லாமும் தெளியப்படும்.

**கந்தன் :**

முருகன் என்னும் சொல்லைப்போலவே, அப்பெருமானைக் குறிக்கும் வேறு பல சொற்களும் மிகவும் ஆழ்ந்த பொருட்சிறப்பும் செறிவும் உடையவை. **கந்தன்** என்பது அவற்றுள் மிகவும் பயின்று வழங்கி வரும் அரும்பெருஞ் சொல். கந்தரனுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி,கந்தர்கலிவெண்பா, கந்தபுராணம், கந்தர்சஷ்டி என வழங்கி வருதல் இதனை வலியுறுத்தும்.

"சேயவன் வடிவம் ஆறும்
திரட்டிநீ ஒன்றாய்ச் செய்தாய்
ஆயத னாலே கந்தன்
ஆமெனும் நாமம் பெற்றான்"

என்னும் செய்யுளாற் கச்சியப்ப சிவாசாரியர் 'கந்தன்' என்னும் சொற்பொருளைக் கவினுற விளக்கியருளினர். கந்தன் என்பதற்குப் 'பகைவர்களை வற்றச் செய்பவன்' எனவும் வடமொழியிற் பொருள் கூறுவர். தமிழிற் 'கந்து' என்னும் சொல் 'பற்றுக்கோடு' எனப் பொருள்படும். 'காதன்மை கந்தா அறிவறி யார்த் தேறுதல்' என்புழி ஆசிரியர் திருவள்ளுவர் அச்சொல்லைப் பற்றுக்கோடு என்னும் பொருளிற் பண்டே வழங்கியுள்ளனர். ஆதலின், கந்தன் என்பதற்கு 'யாவருக்கும் பற்றுக்கோடாகத் திகழ்பவன்' என்றும் பொருள் கொள்ளுதல் பொருந்தும். இப்பொருளின் அருமைப்பாடு பெரிதும் போற்றியுணர்தற் குரியது.

உயிர்களாகிய நம்மனோர்க் கெல்லாம் பற்றுக்கோடு முருகப் பெருமானைத் தவிர வேறு யாருளர்? நம்முடைய குற்றங்களை யெல்லாம் பொறுத்து, தீவினைகளை யெல்லாம் தீர்த்துக் காத்தருள வல்லவன் முருகனே

யாவன். அப்பெருமானின் திருமுன்பு எய்தி, அவன்றன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வழிபடின், அப்பெருமான் "நோவ உரை யான் நோவக்கண் பார்த்திடான்", தளர விடாது நம்மைத் தண்ணளியோடு ஆட் கொண்டருள்வான்.

"தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்ருல்,
தூயவர் ஆகி மேலைத்
தொல்கதி அடைவர் என்கை,
ஆயவும் வேண்டும் கொல்லோ?
அடுசமர் அந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றே
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்!"

## குமாரன்

குமரன் குகன் முதலிய சொற்களும் முருகனுக்குரிய சிறந்த பெயர்களாகும். "முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும் செயல்தந்து உணர்வு என்று அருள் வாய்" என்பது கந்தரனுபூதி. குமாரன் என் னும் சொல்லே குமரன் என வழங்கப்படும். கு - குற்சிதம், அருவருப்பு, மலம். மாரன் - மரிக்கச் செய்பவன், அழிப்பவன். 'உயிர் களின் மலப்பிணிப்பை அழித்தொழிக்க வல்ல வன் எவனே, அவன் குமாரன் எனப் படுவான்.'

"குவ்வெனும் குற்சிதம் மாமலம்,
கொன்றருள் செய்பவன் மாரன்,என்று
ஒவ்விடும் அர்த்தம தாம்.அவை
ஒன்றும் நவிற்சி குமாரனென்று
உவ்வுளார் நாவில் எழும்பவே
யுள்ளது. சந்ததம் நன்னிலேப்
பவ்வமெ னும்கும ராஎனப்
பன்னுநர் பாவங்கள் பாறுமே!"

என இதனைப் பாம்பன் சுவாமிகள் விளக்கி யருளுவர். "நமோ குமாராய" என்பது முருகனுக்குரிய சடாக்ஷர மந்திரம் ("ஆறெ ழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி") ஆகும் என நச்சினார்க்கினியர் நவில்வர். "நாதா குமரா நமஎன் றரனுர் ஓதாய் என ஓதியது எப்பொருள்தான் ?" எனக் கந்தரனுபூதியில் அருணகிரிநாதர் தாமும் இதனைக் குறிப்பிட் டிருத்தல் உணரற்பாலது.

## குகன்

'குகன்' எனும் திருப்பெயர் 'அடியார் களின் இருதயம் ஆகிய குகையில் எழுந் தருளி விளங்குபவன்' என்பதனை யுணர்த் தும். இக்கருத்தினையே திருவள்ளுவரும்



'மலர்மிசை ஏகினன்' என்று அருளிச் செய்தார். இதனையே வடமொழி உபநிடதங்களும் 'தகர வித்தை' என்றும், 'தகரோபாசனை' என்றும் புகழ்ந்து போற்றுகின்றன. சிவன் எனும் நாமம் போலக் குகன் எனும் நாமமும் பொருள் சிறந்த பெருமந்திரம் ஆகும்; வேத வேதாங் தங்களி லெல்லாம் புகழ்ந்தோதப் பெறும் இக் 'குக' சப்தம், வேறு எந்த மூர்த்திக்கும் இல்லாமல் முருகனுக்கே யுரித்தாக வழங்கி வருவது, அவனது பெருமையினை மலையிலக் கென விளக்கி நிற்கும்.

"இதய பங்கய குகர மேகுகை
என்ப தாரிய பாடையில்,
அதனு ளாய சிதம்ப ரத்துளே
அமல ஞானவிண் மெய்யனுச்
சதத மும்சுக நடன மேபுரி
தம்பி ரானைநற் குகன்எனக்
கதறும் மாமறை. அவனை அன்றிஓர்
கடவுள் நாம்அறி யோம்அரோ!"
—பாம்பன் சுவாமிகள்.

"வணங்கும் ஆருயிர்க் குகைதோறும்
வதிதலால் குகன்என்
றிணங்கு வான்பெயர்க் கியையுமா
றிருப்பது போலாம்,
நிணங்கொள் வேற்படை நின்மலன்
நிரைமணிக் குகையின்
கணங்கொண் டோங்கிய மலைக்கெலாம்
கடவுளாய்க் கலத்தல்"
—தணிகைப் புராணம்.

### விசாகன்

முருகனுக்கு விசாகன் என்பது ஒரு திருப்பெயர். முருகனுக்கு உரிய நட்சத்திரம் விசாகம். வைகாசி விசாகவிழா முருகன் திருக்கோயில்களில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பெறுதல் யாவரும் அறிந்த தொன்று. விசாகம் ஞானத்திற்குரிய சிறப் புடைய நல்ல நட்சத்திரம். மந்திரோபதேசத் திற்கும் அது மிக்க மாட்சிமை யுடையது. மிகச் சிறந்த ஞானிகளாக உலகம் மகிழ்ந் தேத்தும் புத்தர் நம்மாழ்வார் ஆகியோர் விசா கத்தில் தோன்றி யருளினோரே யாவர். விசாகத்திற்குரிய முருகன் 'ஞானபண்டிதன்' என விளங்கித் தன்னை வழிபடும் அடியார் களுக் கெல்லாம் ஞானச் செல்வத்தைப் பெரி தும் வாரி வழங்கி யருள்கின்றான். விசாகம் ஆறு நட்சத்திரங்கள் ஒன்று சேர்ந்தது. எனவே, அதற்குரிய முருகனும் ஆறு திரு முகங்களோடு திகழ்கின்றான். நாம் அன் புடன் முருகனை வழிபட்டால், நமக்கும் ஞானோபதேசமும் மந்திரோபதேசமும் குரு வருளாற் கிடைக்கும் என்பது திண்ணம். வி - பறவை, மயில். சாகன் - சஞ்சரிக்கின் றவன். மயிலை ஊர்தியாகக் கொண்டு எங் கும் உலாவி வருபவன் 'விசாகன்' எனவும் சிலர் பொருள் கூறுவர்.

### சுப்பிரமணியன்

சுப்பிரமணியம் என்னும் திருப்பெயர் வேதங்களிற் பெரிதெடுத்து வழுத்தப் பெறு வது. வேதம் சிவபிரானைச் "சதாசிவோம்" எனச் சாற்றிப் போற்றுதல் போல, முருக னைச் "சுப்ரஹ்மண்யோம்" என மூன்றுமுறை குறிப்பிட்டுக் கூறித் துதிக்கின்றது.

"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்
பிரமனுக்கும் ஈசன் என்னத்
தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன்ஓம்
எனவேதம் சாற்றும் அல்லால்,
முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன்
ஓம்எனவும் முக்கால் கூறும்.
இக்கருத்தை அறியானை எவ்வாறு
விடுவிப்பது? இயம்பு மின்னே!"

எனக் காஞ்சிப்புராணத்தில் குமரகோட்டப் படலத்தில், சிவஞான சுவாமிகள் அருளிச் செய்திருத்தல் இவ்வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும்.

இனி, 'சுகுணம்' என்னும் சொல்லிற் குணத்திற்கு முன்வரும் 'சு' என்னும் உப சர்க்கம் விசேடப்பொருள் பயந்து நிற்பது போலவே, சுப்பிரமணியன் எனும் பெயரிலும் அவ்வுபசர்க்கம் விசேடப்பொருள் உணர்த்தி நிற்கும். 'பிரமணியன்' என்பது பிராமணர்க் கும் வேதத்திற்கும் முதன்மை மிக்க தேவன். என்னும் கருத்தைப் புலப்படுத்தும். இதற்கு வேறொரு சிறந்த பொருளும் கூறலாம். சு - சுகம், ஆனந்தம். பிரமம் - சிவபரம்பொருள். ந்யம் (ண்யம்) - அதினின்றும் தோன்றி ஒளிர்வது. ஆனந்தத்தையே சொரூப லட் சணமாக உடைய சிவபரம்பொருளினின்றும் தோன்றி, அதனின் வேறல்லதாய் விளங்கு வது என்பது 'சுப்ரமண்யம்' எனும் திருப்பெய ரின் திரண்ட பொருள்.

"சுவ்வெ னும்மொழி சுத்தஇன் பாகும்.ஓர்
அவ்வி யத்தவிண் ணும்பிர மத்தினின்று

எவ்வம் இன்றெளிர் கின்றமின் னே,ணியம்
ஒவ்வும் கீர்சுப்ர யண்யம்என் றேர்தியால்''

இதனால் முருகன் சிவமாகிய பிரமப் பொருளினின்று தோன்றி அதனின் வேறற்று விளங்குவன் என்பதும், சிவபிரானும் முருகனும் தம்முள் ஒருவரே யன்றித் தமக்குள் பேதம் இல்லாதவர் என்பதும் பெறப்படும். பின்வரும் கந்தபுராணச் செய்யுட்கள் இக் கருத்தை வலியுறுத்தும்.

''அருவமும் உருவும் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும்
கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு
உதித்தனன் உலகம் உய்ய''

ஆதலின் நமது சத்தி
அறுமுகன் அவனும் யாமும்
பேதகம் அன்றால். நம்போற்
பிரிவிலன் யாண்டும் நின்றான்.
ஏதமில் குழவி போல்வான்
யாவையும் உணர்ந்தான். சீரும்
போதமும் அழிவில் வீடும்
போற்றினர்க் கருள வல்லான்''

—கந்தபுராணம்.

''துப்புரவு நாடுயிரே! சுப்பிரமண் யத்தின்மேல்
எப்பிரமம் உள்ளது? இயம்பு''

—பாம்பன் சுவாமிகள்.

## சரவணபவன்

முருகனின் திருப்பெயர்களுள் சரவணபவன் என்பதும் மிகவும் சிறப்புடையது. அது சரம்+வனம்+பவன் என்னும் மூன்று சொற்களைக் கொண்டது. சரம் - நாணற் புல். வனம் - காடு, பொய்கை. பவன் - தோன்றியவன். நாணற்புற்கள் செறிந்து சூழ்ந்த பொய்கையில் தோன்றிய காரணம் பற்றி முருகனுக்குச் சரவணபவன் என்பது பெயராயிற்று.

''மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொ ணுமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி
அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில்
வீற்றிருந் தருளி னனே''

என்பது கந்தபுராணம். சிவபிரானின் ஐந்து முகங்களோடு அதோமுகமும் சேர்ந்து முருகனுக்கு ஆறு முகங்கள் ஆயினாற்போல, சிவபிரானுக்குரிய திருவைந்தெழுத்தே பிரணவத்துடன் சேர்ந்து முருகனுக்குரிய 'சரவணபவ' என்னும் தாரகப் பிரமம் ஆகிய ஆறெழுத்து மந்திரம் ஆயிற்று.

''நன்முகம் இருமூன் றுண்டால்
நமக்கு அவை தாமே கந்தன்
தன்முகம் ஆகி யுற்ற;
தாரகப் பிரமம் ஆகி
முன்மொழி கின்ற நந்தம்
மூவிரண் டெழுத்தும் ஒன்றாய்,
உன்மகன் நாமத்து ஓர்ஆறு
எழுத்தென உற்ற அன்றே''

எனவே 'சரவணபவ' என்னும் சிறப்பு மந்திரத்துக்குரியவன் சரவணபவன் எனப்படுவன். ச - மங்களம், ர - ஒளி, வ - சாத்வீகம், ந - போர், பவன் - தோன்றியவன். மங்களம் ஒளி சாத்வீகம் வீரம் முதலிய உயர்ந்த பண்புகளுடன் தோன்றியவன் எனவும் இத்தொடர்க்குச் சான்றோர்கள் பொருள் விரித்துரைப்பர்.

சரவணன் என்பது சிவபிரானையும் திருமாலையும் குறிக்கும் பெயர் என்றும், முருகனுக்குச் சரவணபவன் எனப் பெயர் வழங்குதலால் அவன் அவ்விருவர்தம் இயல்புகளையும் பொருந்தி நிற்பவன் என்றும், திருச்செந்தூர்ப் புராணம் கூறும்.

## முருகனின் மாட்சிமைகள்

முருகன் இயற்கைத் தெய்வம். தமிழ்க் கடவுள். நீலக் கடலில் காலைச் செங்கதிரவன் தோன்றும் அழகிய இனிய காட்சியைக் கண்டு மகிழ்ந்த பழந்தமிழர்கள், நீலமயில் மீது இவர்ந்து வரும் செந்நிறம் உடைய முருகனை நினைந்துணர்ந்து மிகப் பழங்கால முதலே வழிபடத் தொடங்கினர் என்பர். இதனை,

''உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓ அற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி''

எனவரும் திருமுருகாற்றுப்படை வரிகள் விளக்குகின்றன. ஞாயிறு புற இருளைப்

போக்குகின்றது; முருகன் அகவிருளைப் போக்குகின்றான். ஞாயிற்றின் தோற்றம் யாவரையும் மகிழ்விக்கின்றது; அதுபோல முருகன் திருவுருவும் அனைவரையும் இன்புறுத்துகின்றது. ஞாயிறு உலகுக்கு ஒளியுதவி நலம் செய்கின்றான்; அங்ஙனமே முருகனும் பேரொளி வடிவினனாகப் பிறங்கி மன்னுயிர்கட்கெல்லாம் தண்ணருள் புரிகின்றான். ஞாயிறு அனைவராலும் புகழ்ந்து போற்றப்படுகின்றது; அவ்வாறே முருகனும் பலரும் போற்றுதற்குரியவனாகத் திகழ்கின்றான். முருகனைச் 'சமஷ்டித் தெய்வம்' எனத் தக்கவர்கள் போற்றுவர்.

பிற தெய்வங்களுக்கு இல்லாத வகையில் முருகன் ஆறு திருமுகங்கள் உடையவனாக விளக்குகின்றான். அஃது அவனது சிறப்பியல்பை யுணர்த்துகின்றது. தன் ஆறு திருமுகங்களால், அடியார்களின் அச்சங்களையும் கவலைகளையும் போக்கி ஆறுதலை அளிக்கின்றான் முருகன். "அஞ்சுமுகம் தோன்றின் ஆறுமுகம் தோன்றும்" என்பது ஒரு பழம் பாடல்.

"அஞ்சுமுகம் தோன்றாமல்
ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச்
சிந்தைவைப்ப தெந்நாளோ?"

என்பர் தாயுமானவர். ஞானம் ஐசுவரியம் திரு வீரியம் வைராக்கியம் புகழ் என்னும் பகவத் குணங்கள் ஆறும் முருகனுக்கு ஆறு முகங்கள் ஆயின என்றும், சிவபிரானின் ஈசானம் சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருடம் என்னும் ஐந்து முகங்களுடன் அதோ முகமும் சேர்ந்து முருகனின் ஆறுமுகங்கள் ஆயின என்றும், கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு மேல் கீழ் ஆறு திசைகளிலும் சிதாகாசமாக நிறைந்திருப்பவன் ஷண்முகன் ஆகிய முருகன் என்றும், பிறவாறும் பெரியோர் கூறுவர்.

"ஆறு சமயக் கடவுள் வேறுவே றின்றி
யான்ஒரு வனேஅங் கங்கிருந்து
அன்பர்க்கு முத்திதரு வித்தென்று
யாவர்க்கும் அறிவித்த வதன மணியே"

என்பது சிதம்பர சுவாமிகள் அருளிய திருப்போரூர்ச் சந்நிதி முறை. பெருங்கவிஞரேறு எனப் பிறங்கியிருந்த மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், சைவம் வைணவம் கௌமாரம் காணபத்யம் சாக்தேயம் சௌரம் என்னும் ஆறு சமயங்களுக்கும், மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களுக்கும், வன்னம் பதம் மந்திரம் புவனம் தத்துவம் கலை என்னும் ஆறு அத்துவாக்களுக்கும் முதல்வன் முருகனே என்பதனை அவனது ஆறு திருமுகங்களும் அறிவிக்கின்றன எனப் பாடுகின்றார்.

"ஆட்டும் சமயம் ஆறினுக்கும்
ஆதா ரங்கள் ஆறினுக்கும்
அத்து வாஎர் ஆறினுக்கும்
அமையும் தானே முதல்என்று
தீட்டும் படியா வரும்தெளியத்
தெளிந்தாங் காறு முகம்திகழச்
செல்வம் மலியும் இடைக்கழிவாழ்
சேயைப் பரிந்து காக்கவே'

—திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ்.

முருகனின் ஆறு திருமுகங்களும், அவற்றிற்கியைந்த பன்னிரண்டு திருக்கைகளும் செய்யும் அருட் செயல்களைத் திருமுருகாற்றுப்படையும், கந்தர் கலிவெண்பாவும் செவ்விதின் விளக்குகின்றன. அப்பகுதிகளால் முருகனின் பலதிற மாட்சிமைகளையும் நலமுற உணரலாம்.

### வள்ளியம்மையார்

இறைவனுக்கு இச்சை கிரியை ஞானம் என்னும் மூவகைச் சத்திகள் உண்டு. (சித்தியார் சுபக்கம் 83). அவற்றுள் இச்சா சத்தியே வள்ளியம்மை என வழங்கப்படுகின்றது.

"பணியா? எனவள்ளி பதம் பணியும்
தணியா அதிமோக தயா பரனே"

என்பது கந்தர் அனுபூதி.

"குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே"

என்பது திருமுருகாற்றுப்படை. 'போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல்' இறைவன் தன்மை (சித்தியார் 70) ஆதலின், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்பொருட்டு முருகன் வள்ளியம்மையாரோடு தன் ஒரு திருமுகத்தாற் பேசி மகிழ்ந்து நகையமர்ந்திருக்கின்றான். காமநுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் வள்ளியொடு நகையமர்

திருத்தல், உலகுயிர்கள் எய்தத்தக்க நன்மை யின் பொருட்டேயாம். வள்ளியை ஞான சத்தியாகவும் சிலர் கொள்வதுண்டு.

"பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற
பேதை கொங்கை
விரும்பும் குமரன்"

எனக் கந்தரலங்காரம் கூறும். அதனுள் தினைப்புனம் உலகம், தினைக்கொல்லை ஞானப்பயிர் விளையும் இடம், வள்ளி என்பது பரிபக்குவம் அடைந்த நல்லுயிர், வள்ளியின் கொங்கைகள் பரஞானம் அபரஞானம் என்பர்.

பரிபாடல் என்னும் சங்கநூலில் "காமத்துச் சிறந்தது காதலையுடைய காமம். அக் காதலையுடைமையால் வள்ளியம்மை சிறந்தாள். அக்காதலையுடைய தமிழை ஆராய்ந்த காரணத்தால் முருகப்பெருமான் சிறந்தான்" எனக் குன்றம்பூதனார் என்னும் புலவர் பாடுகின்றார். "முருகு புணர்ந் தியன்ற வள்ளிபோல" என நற்றிணை நாவினிக்கப்பாடுகின்றது. குறவர் குலமகள் ஆகிய வள்ளியை முருகன் நயந்து வலிந்து வந்து மணந்து கொண்டமை, அடியார்களை அப்பெருமான் பெரிதும் விரும்பி 'வா வா என்று வலித் தாண்டுகொள்ளும்' எளிமைத் தன்மை (சௌலப்பியம்) ஆகிய பேரருட்டிறத்தினைப் புலப்படுத்துகின்றது.

வள்ளியம்மை திருமணம் சிவஞான போதம் எட்டாஞ் சூத்திரப் பொருளையே உள்ளுறை பொருளாகக் கொண்டுள்ளது என்பர். 'வள்ளிக்கூத்து' என்பதொன்று தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே தமிழகத்தில் நிகழ்ந்து வந்தது. அதனை "வாடா வள்ளி" எனச் சிறந்தெடுத்து மொழிந்துள்ளனர். அஃது இன்றும் வாடா மலர்போலவே விளங்கி நடிக்கப்பெற்று வருதல், வியப்பும் மகிழ்ச்சியும் விளைக்கின்றது.

"குலம் நினையல் நம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலம் நுகர்ந்தான் அன்றே நறுந்தார் முருகன்"
—சீவகசிந்தாமணி.

"குறமகள் அவள்எம குலமகள் அவளொடும்
அறுமுக ஒருவநின் அடியிணை தொழுதேம்"
—சிலப்பதிகாரம்.

களவு கற்பு என்னும் தமிழ் மக்களின் திருமண முறைகள் இரண்டினுள், வள்ளியம்மை திருமணம் களவுத் திருமணம் ஆகும் எனப் பரிபாடல் (9) கூறுகின்றது. கச்சியப்ப முனிவர் தமது தணிகைப் புராணத்துள் அகப்பொருள் இலக்கணச் சுவைகள் பலவும் அமையக் 'களவுப் படலம்' என ஒன்றைப் பாடியிருக்கின்றார். வள்ளியம்மை கரியநிறம் உடையவர், முருகனின் வலப்பக்கத்தில் வீற்றிருப்பவர், கையில் தாமரை ஏந்தி யிருப்பவர் என்பது அன்பர்கள் அறிதற்குரியது.

## தெய்வயானை அம்மையார்

ஆசிரியர் நக்கீரர் தமது திருமுருகாற்றுப் படையின்கண் 'மறுவில் கற்பின் வாணுதல்' என்றும், 'தாவில் கொள்கை மடந்தை' என்றும் குறிப்பிட்டு இவரைப் புகழ்ந்து போற்றுகின்றார். தெய்வயானை முருகனுக்குக் கிரியாசத்தியாவர். அதுபற்றியே,

"மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன் என
இப்பெயரை முற்கூறினார். படைத்தற்கும் காத்தற்கும் உரிமை தோன்ற"

என ஆசிரியர் நச்சினார்க்கினியர் சிறந்த தொரு விளக்கம் வரைந்தார். தெய்வயானையை 'அறக்கற்புடையாள்' என்பர் அவர். செயலாற்றும் திறம் மிக்கவர்கள், புகழ் விரும்பாது பெரிதும் அடக்கமாக இருத்தல் இயல்பு. அதற்கேற்ப, முருகனின் கிரியாசத்தியாகிய தெய்வயானையம்மையின் சிறப்பும் நூல்களிற் சான்றோர்களால் தனியே கிளந்தெடுத்து மிகுதியாக ஓதப் பெற்றிலது. தெய்வயானை யம்மையார் செந்நிறம் வாய்ந்தவர். முருகனின் இடப்பால் விளங்குபவர், கருங்குவளை மலரைக் கையில் ஏந்தி யிருப்பவர்.

## வேற்படை

இது முருகனுக்குத் தனிச் சிறப்பு மிக்க படை. 'வேல்' என்னும் சொல் 'வெல்' என்னும் பகுதியினின்றும் தோன்றியது. வெல்ல வல்லது எதுவோ அதற்கே வேல் என்று பெயர். வெற்றி தருவது வேல் என்பது பற்றியே 'வெற்றிவேல்' என்பதொரு வழக்கும் ஏற்படுவதாயிற்று. வேலிற் சிறந்த ஆற்றல் மிக்க படை வேறொன்று இல்லை. ஆதலின் இதற்குச் 'சக்தி' என்றே வடமொழியில் ஒரு பெயர் உண்டு. "சத்தி தன் வடிவே தென்

னில் தடையிலா ஞானம் ஆகும்'' என்பது சித்தியார். அதன்படி, சத்தி எனப் பெயரிய வேற்படையே முருகனுக்கு ஞானசத்தியாக விளங்குகின்றது. ஞானமே அஞ்ஞானத்தை வெல்ல வல்லது ஆகலின், ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்களாகிய சூரபதுமன் சிங்கமுகன் தாருகன் என்னும் அசுரர்களை அழித்தொழித்து, ஞானமயம் ஆகிய வேலே யாவருக்கும் நலம்புரிந்தது. 'வேலை வணங்குவது எமக்கு வேலை' எனச் சான்றோர் ஒருவர் மொழிந்தனர். முருகனின் வேலை வணங்குதலால், நாம் எல்லா ஞானமும் நலன்களும் பெறலாம்.

"பார்முதல் பனிக்கடல் கலங்க உள்புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்''

"சூர்மருங்கு அறுத்த சுடரிலை நெடுவேல்''

என நக்கீரர் இதனை நனிபெரிதும் துதித்துப் புகழ்கின்றார்

"கடம்பமர் நெடுவேள் அன்ன மீளி
உடம்பிடித் தடக்கை''

என்பது பெரும்பாணாற்றுப்படை. மிகப் பழங் காலத்திலேயே புகார் நகரத்தில் "வேற்கோட்டம்'' இருந்த செய்தி சிலப்பதிகாரம் 'கனாத் திறம் உரைத்த காதை'யால் தெளியப்படுகின்றது. முத்தமிழ் வித்தகர் ஆகிய இளங்கோவடிகள் வேலின் சிறப்பினைப் பின்வருமாறு விதந்து புகழ்ந்து மகிழ்ந்தின்புறுகின்றார்.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும்
வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை
வேல் அன்றே
பாரிரும் பவ்வத்தின் உள்புக்குப்
பண்டொருநாள்
சூர்மாத் தடிந்த சுடரிலைய
வெள்வேலே''...

## கோழிக்கொடி

முருகனுக்குக் கொடியாக விளங்குவது கோழி. முருகனை வழிபடுவோர் கோழிக் கொடி நாட்டி, அதனை வாழ்க என்று வழுத்தி மகிழ்தல் பண்டு தொட்டுப் பயின்ற செயல் இதனை,

"கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர்அர மகளிர் ஆடும் சோலை''

எனவரும் திருமுருகாற்றுப்படை வரிகள் உணர்த்தும். கோழிக்குச் சேவல் என்பது பெயர். அது பிற பறவைகளுக்கும் பொதுப் பெயராக வழங்கப்படும். "உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்'' என்புழி அதனைக் காணலாம். இது சேவலின் சிறப்பினை யுணர்த்தும். சேவலாகிய கோழி ஒளியை விரும்புவது. எனவே, அது அறியாமை இருளைப் போக்கி அறிவாகிய ஒளியைப் பரப்பும் முருகனின் கொடியாக விளங்குவது பொருத்தமேயாம். வைகறையிற் கோழி கூவுதல், ஓங்கார மந்திரத்தை ஒலி வடிவால் உலகுக்கு உணர்த்துவதாகும். எனவே கோழியை நாததத்துவம் என்பர். நாதத்துவம்தான் எல்லாவற்றிற்கும் மூல முதல் தத்துவம். நாதம் இல்லையேல் நானிலமேயில்லை. அச்சிறப்புக் குறித்தே,

"கோழிக் கொடியன் அடிபணியாமற் [குவலயத்தே
வாழக் கருதும் மதியிலிகாள்''

என்றருளிச் செய்தனர் அருணகிரிநாதர்.

## மயில் ஊர்தி

முருகன் சூரபதுமனைக் கொல்லுதற்கு முன்னரே முருகனுக்கு மயில் ஊர்தி இருந்தது. இந்திரனும் மயிலாக முருகனைத் தாங்கினான். மயில் தன் அழகால் யாவரையும் மயக்கவல்லது. எனவே அதனை 'மாயை' என்பர். கோழி ஊர்த்துவ மாயை. மயில் அதோ மாயை. கோழி நாதத்துவம் எனின், மயில் விந்து தத்துவம்.

"சால விளங்கும் விந்து தத்துவம் எனும்
தடமா மயிலோய் தாலேலோ''

என்பது திருப்போரூர்ச் சந்நிதிமுறை. நாதம் ஒலி வடிவினது. விந்து ஒளி வடிவினது. விந்து தத்துவம் ஆகிய மயில், கண்கவரும் ஒளியுடையதாய்ப் பலவகை நிறங்களைக் கொண்டு திகழ்தல் காணலாம். மயிலைப் பிரணவ மந்திரம் எனக்கொள்ளலாம். தோகையை விரித்து ஆடும் மயிலின் தோற்றம் ஓங்காரம்போல ஒளிர்தல் யாவரும் அறிந்ததொன்று. அது பற்றியே அருணகிரிநாதர் 'ஓங்காரத்துள்ளே முருகன் உருவங்

கண்டு தூங்குதல் வேண்டும்' எனக் கந்தர லங்காரத்திற் குறிப்பிட்டார். மயிலின் வடிவம் இங்ஙனம் மந்திரரூபமாக விளங்குதல் குறித்தே,

"ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்டது
ஆடும்மயில் என்ப தறியேனே"

எனவரும் திருப்புகழ்ப்பாடல் எழுந்தது.

### கந்தர் சஷ்டி விரதம்

இனைய பல பெரு மாட்சிமைகளையுடைய முருகனைக் கந்தர் சஷ்டியின்போது, கனிந்துருகி வழிபடுவது நமக்குப் பல நலங்களையும் பயக்கும். கந்தர் சஷ்டி விரதத்தால் நாம் எல்லா நலங்களையும் எய்துதல் கூடும். 'குடம்' 'சட்டி' என்னும் சொற்களை வைத்து, 'குடத்தைப் பிடித்தவன் சட்டியை நோக்கக் குறைவிலையே' என்று விளையாட்டிற்காக ஒருவர் ஈற்றடி கொடுத்துப் பாடச் சொல்லியபோது, புலவர் ஒருவர் 'குக்குடத்தை (கோழிக்கொடியை)ப் பிடித்தவன் (முருகன்) சட்டியை (சஷ்டி விரதத்தினை) நோக்க (அனுட்டித்துவர)க் குறைவில்லையே' என்னும் அழகிய இனிய அரிய கருத்தினைப் பொருத்தி, அதற்கேற்ற எதுகை மோனை முதலிய செய்யுள் உறுப்புக்களை அமைத்துக் கட்டளைக் கலித்துறைச் செய்யுள் ஒன்றைக் கவினுறப் பாடிக் காட்டினார். கந்தர் சஷ்டி விரத வழிபாட்டின் பயனை வலியுறுத்தும் சுவை மிகுந்த அச்செய்யுள் யாவரும் அறிந்து மகிழற்பாலது.

"கடத்தைப் பழித்துக் களபம்
திமிர்ந்து கனகமணி
வடத்தைத் தரித்துச் சுணங்கு
படர்ந்தொளிர் வள்ளிதன
தடத்தைத் தடவும் தனது
மலர்க்கைத் தலத்தினிற் குக்
குடத்தைப் பிடித்தவன் சட்டியை
நோக்கக் குறைவிலையே"

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் கந்தர் சஷ்டி விழாக் குறித்துச் சொற்பொழிவாற்றுங்கால், பின்வரும் கருத்தை அழகுற விளக்குவதுண்டு. "சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்" என்பது யாவரும் அறிந்த தமிழ்ப் பழமொழி. நம்மனோர்க்கு அதனைக் கேட்குங்கால், வெறும் சட்டியும் அகப்பையும் மட்டுமே நினைவுக்கு வரும். ஆனால் அதற்கு ஞானியார் சுவாமிகள் 'சஷ்டியில் விரதம் இருந்தால் அகம் ஆகிய கருப்பையில் மகப்பேறு வாய்க்கும்' என்னும் அரிய பொருளை விளக்குவர்.

பரிபாடல் என்னும் சங்க நூல்,

"வருபுனல் அணிகென வரங்கொள் வோரும்
கருவயிறு உறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து
[வோரும்"
ஐயமர் அடுகென அருச்சிப் போரும்"

என மிகப் பலர் திருப்பரங்குன்றில் முருகனை வழிபடுதலைக் குறிப்பிடுகின்றது. முதுமை மிக அடைந்த நாகனும் தத்தையும் முருகனை வழிபட்டே, கண்ணப்ப நாயனாரைத் தம் புதல்வராகப் பெற்றெடுக்கும் பெரும்பேறு எய்தினர்.

"பொருவரும் சிறப்பின் மிக்கார்
இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற
அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல்
முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும்
பராய்க்கடன் நெறியில் நிற்பார்"

எனவரும் பெரிய புராணப் பாடல் இதனை வற்புறுத்தும்.

### முடிவுரை

இத்தகைய நலங்கள் பலவற்றையும் நல்கும் கந்தர் சஷ்டி விரதத்தினை, நாம் அனைவரும் கடைப்பிடித்தொழுகி, முருகன் திருவருளைப்பெற்று உய்ய முயலுவோமாக!

"முருகா உனஉனை ஓதும்
தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார்.
வியாதி அடைந்துநையார்.
ஒருகால முந்துன்பம் எய்தார்.
பரகதி உற்றிடுவார்.
பொருகாலன் நாடு புகார்.
சம ராபுரிப் புண்ணியனே"

# சிவஞானபோதம்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T., காஞ்சிபுரம்.

(முன்தொடர்ச்சி)

**௪ ஆம் சூத். இரண்டாம் அதி.**

1. சூத்திரப் பகுதி: "அவை சந்தித்தது ஆன்மாச் சகச மலத்துணராது."

2. வார்த்திகம்: "இனி இவ்வான்மாச் சகச மலத்தினல் உணர்வின்று என்றது, அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்."

விளக்கம்: முன் அதிகரணத்தில் ஆன்மா மனம்புத்தி அகங்கார சித்தங்களாகிய அகக்கருவிகளுள் ஒன்றன்று; அஃது அவற்றின் வேருய்ப் பொருள் உணர்வோடு தன்னைக்கு உணர்வும் உடையதாம் என்பது விளக்கப்பட்டது. அஃது அவற்றின் வேருயின், அவற்ருெடு கூடிநின்று அறிதற்குக் காரணம் யாது எனப் பின்னர் வினு எழுகின்றது. அவ் வினுவிற்கு விடைகூற எழுந்தது இவ்விரண்டாம் அதிகரணம்.

ஆன்மா உணரும் இயல்பிற்று என்பது காட்சியளவைபற்றிக் கொள்ளப்படும் அடிப்படை உண்மை. ஆயினும், அது தானே உணர்வதில்லை; கருவியால், காட்டால், பிறவாற்ருல் உணர்த்தப்பட்டே உணர்கின்றது. ஆதலால், அதன் உணருந்தன்மையைத் தடுத்து நிற்கும் ஒருபொருள் உண்டு எனக் கொள்ளவேண்டியுள்ளது. அத் தடுக்கும் பொருளை இருள், மாசு, மலம், ஆணவம் முதலிய பெயர்களால் நூல்கள் குறிக்கின்றன. அறியாமையை ஆன்மாவின் குணம் என யாரும் கொள்ளார்; ஆன்மாவின் அறிவை மறைக்கும் ஒருபொருளின் குணம் எனவே கொள்வர். அறியாமையை விளைக்கும் அக் குற்றம் ஆன்மாவிற்குப் பின் ஒருகாலத்து உண்டாயிற்று எனக்கூறப்படாமல், தோற்றமில் காலமாகவே அஃது ஆன்மாவைப்பற்றி உள்ளது எனக்கருதி உணரப்படும்.

நிலத்தில் பிராணவாயுவும், செம்பும், செம்பொன்னும் உள்ளன. செம்பொன் பிராணவாயுவுடன் விரவிக் களிம்புறுவதில்லை; ஆயின், செம்பு பிராணவாயுவைப் பற்றித் தன் ஒளிகுன்றிக் களிம்புறுகின்றது. அக்களிம்பு செம்பிற்குப் பின் வந்ததன்று; இயற்கையாக உள்ளது. அதுபோல, ஆன்மாவிற்கு அதன் அறிவை மறைக்கும் குற்றம் பின் வந்தது அன்று; ஆன்மா என்று உண்டோ அன்றே அக்குற்றமும் அதற்கு உள்ளது என்று கொள்ளப்படும். படவே, அக்குற்றம் சகசமலம் எனப்படும். சகசம் என்னும் சொல் உடன்தோன்றியது, இயற்கை எனப் பொருள்படும். அதற்கு எதிர்ச்சொல் ஆகந்துகம் என்பது. ஆகந்துகம் என்னும் சொல் (பின்) வந்தது, செயற்கை எனப் பொருள்படும். ஆணவம் இயற்கையாயின் அது பின் நீங்காதோ என்னும் ஐயம் வேண்டா; குற்றமாதலின் நீங்கும்.

இரண்டாம் சூத்திரத்தில் ஆன்மாவைக் கட்டுப்படுத்துவனவாகக் கூறப்பட்டவைகள் மாயை, கன்மம் என்னும் இரண்டுமாம். அவை நித்தியப் பொருள்களேயாயினும், ஆன்மாவின் அறியாமையை ஒருசிறிது நீக்கிச் சுட்டறிவை விளக்குதற்பொருட்டு அவை முதல்வனுல் அதனேடு அணைக்கப்பட்டவை; ஆதலால் அவை ஆகந்துக மலங்கள் எனப்படும்.

புத்தாடையில் இயற்கையாக எண்ணெய், சோற்றுப்பசை முதலிய அழுக்கு உண்டு: அவ்வழுக்கைப் போக்குதற்கு வண்ணன் உவர்மண்ணும் சாணமும் சேர்ப்பன்; இக்காலத்துச் சலவை மருந்து சேர்க்கப்படுகிறது. ஆன்மா ஆடை போன்றது; அதை இயற்கையாகவே பற்றி அறியாமையில் அழுத்தும் ஆணவமலம் அல்லது இருண்மலம் எண்ணெயோடு கூடிய சோற்றுப்பசை போன்றது. அதனல் அது சகசமலம் எனப்பட்டது. ஏனை மாயைகன்மங்களாகிய ஆகந்துக மலங்கள் உவர்மண்ணும் சாணமும் அல்லது சலவை மருந்தும் போன்றவை.

இயற்கை மலம் எனப்பட்ட ஆணவம் ஆன்மாவின் அறிவாற்றலை அழித்து இல்லையாக்கி விடவில்லை; மற்று, அதனை நிகழவொட்டாமல் தடுத்து, இல்லை எனும்படி மறைத்துவிடுகிறது. ஆதலால், அது ஞானதிரோதகம் எனப்பட்டது. ஞானம் - அறிவு;

திரோதகம் - மறைப்பது. சகசமலத்தின் இலக்கணத்தை ஆகம வழக்குப்பற்றி ஞான **திரோதகம்** எனக் குறித்து, அச்சொல்லினியல் பைத் தமிழ் வழக்குப்பற்றி விளக்குதற் பொருட்டு, ஆசிரியர் மெய்கண்ட முதல்வர் "**அதுதான் ஞானதிரோதகமாய்** மறைத்துக் கொடு **நிற்றலான்**" எனக் கூறியருளினர். ஞானம் என்னும் சொற்பொருள் எளிதின் விளங்கிக் கிடத்தலின், அதனை மொழிபெயர்க்காமல் அவாய் நிலையாற் பெற வைத்தார்.

ஆன்மா சாரும் பொருள்கள் மூன்று. இருள் (ஆணவம்), பொருள் மாயை, அருள் என்பவை அவை.

ஆன்மா ஆகந்துக மலங்களோடு கூடாத தனிநிலை கேவலநிலை எனப்படும். கேவலம்- தனிமை அல்லது தன் உண்மை. இத்தனி நிலையில் ஆன்மாவுக்குச் சார்பு இருளே. ஆகந்துக மலங்களோடு கூடியநிலை பிறப்பு நிலை ; அது சகலநிலை எனப்படும். இவை இரண்டும் முறையே இரவும் பகலும் போல் வன. இவ்விரு நிலையும் நீங்கி ஆன்மாத் தூய்மையுற்றுத் திருவருளில் அழுந்தும்நிலை சுத்தநிலை அல்லது முத்திநிலை எனப்படும். இதனை **இராப் பகலற்ற இடம்** என நூல்கள் குறிக்கும்.

ஆணவம் ஆன்மாவுக்குக் கேவலநிலை யில் அறியாமையைச் செய்யும் ; சகலநிலை யில் சுட்டுணர்வாகிய திரிபுணர்வைச் செய் யும். அறியாமையைச் செய்தல் அதன் தன் னியல்பு (சொரூபலக்கணம்) ; திரிபுணர் வைச் செய்தல் பொதுவியல்பு (தடத்தலக்க ணம்). அறியாமையைச் செய்யும் ஆணவ ஆற்றலை ஆவாரக சத்தி என்பர் ; திரிபுணர் வைப் பயப்பது அதன் அதோ நியாமிகா சத்தி எனப்படும்.

ஆணவமலம் உண்டு என்பதற்குப் பிரமாணம் முதற் சூத்திரத்தில் கூறப்பட் டது. தோன்றிநின்று மறையும் உலகம் ஏன் மீளவும் தோன்றுதல் வேண்டும் என் னும் வினாவிற்கு விடைகூறு முகத்தால் ஆண்டு ஆணவமலத்தின் உண்மைக்குப் பிரமாணங் கூறப்பட்டது ; ஈண்டு, ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்றாயினும் அவற் றோடு சந்தித்துநின்று அவத்தையுறுதற்கு ஏது என்னை என்னும் ஆசங்கைக்கு விடை கூறும் முகத்தால் அதன் இருவகை இலக்க ணங்களும் பெறுவிக்கப்பட்டன.

3. (அ) இவ்வதிகரணத்துள் தன்றாற் கூறப்படும் பொருள் :—ஆன்மாவின் குண மாகிய உணருந்தன்மை, அதனை அநாதியே பற்றியுள்ள இருள்மலத்தால் மறைப் புண்டது.

(ஆ) ஐயப்பாடு :— ஆன்மாவின் உணர்வை மறைக்கும் பொருள் மாயைகன் மங்களுக்கு வேறாக உண்டோ இன்றோ என்பது.

(இ) பிறர் கூறும் பக்கம்;-தனுகரண புவனபோக ரூபமாய்க் காரியப்பட்டுள்ள மாயைக்கு வேறாக இருள் மலம் என ஒன்று அறியப்படவில்லை. ஆதலால், ஆன்மாவின் உணர்வை மறைப்பது மாயாகாரியம் எனக் கொள்ளுதலே பொருத்தம். அதற்கு வேறாக மூலமலம் என ஒரு பொருள் உண்டு எனக் கொள்ளுதல் மிகை என்னும் குற்றமாம். இங்ஙனம் கூறுவோர் ஐக்கியவாத சைவர் முதலியோர்.

(ஈ) மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு:—ஆன்மா தனுகரண முதலியவற் றோடு கூடியவழி அறிவு விளங்கப் பெறுத லும் அவற்றோடு கூடாதவழி அறியாமையுள் அழுந்துதலும் காட்சியளவையான் உணரப் படும் உண்மை. ஆதலால் மாயா காரியமே மறைப்பது எனக்கூறுதல் காண்டல் விரோ தமாம். காட்டாய் நின்று உலகப் பொருள் களை அறியும்படி உயிர்க்கு அறிவை விளக்கு தல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடை செய்துகொண்டு நிற்றல் மூலமலத்தின் செய்தி. இங்ஙனம் இவை இரண்டும் ஒளி யும் இருளும் போல இகலி நிற்பன ஆகலின், உயிரின் அறிவை மறைத்து நிற்பது மாயைக்கு வேறாகிய பொருளேயாம். இன் னும், மாயை உயிர்க்கு வேறாக அறியப்பட்டு அதன் அறிவை விளக்கும்; மூலமலம் உயி ரோடு விரவி நின்று தன்னை வேறு காட்டா மல் அறியாமையையும் திரிபுணர்வையும் விளைத்துக்கொண்டே இருக்கும். இக்கார ணத்தால் சைவாகம உணர்வு இல்லாத எல் லாச் சமயத்தாரும் மூலமலத்தின் உண் மையை உணரார் ஆயினர்.

உமாபதி சிவனார், 'மூலமலம் இருளோடு உவமித்துப் பேசப்படினும் அஃது இருளி னும் கொடிது' என்கிறார்; இருள் பிற பொருள்களை மறைத்தாலும் தன்னைக்காட்டி நிற்கின்றது. ஆதலால் இருளில் அகப்படும்

மக்கள் அதனை நீக்குதற்கு வேண்டிய விளக்கைத் தேடுவர். ஆனால் சகசமலமோ அறியாமையை உண்டாக்குவதோடு, தான் உண்டு என்பதையும் அறியவொட்டாது. அதனால் சகசமலத்தின்நீக்கம் கருதி முயல்வார் அரியர் ஆகின்றனர். அஃது இருளினும் கொடிது என்கின்றார்:

''ஒருபொருளும் காட்டா திருள்உருவம் காட்டும்;
இருபொருளும் காட்டா(து) இது''
— திருவருட்பயன் 23.

பின்வரும் சிவஞான சித்தித் திருவிருத்தம் இங்கு ஆராயப்படும் தடை விடைகளைத் தெளிய உணர்த்துவதாக உள்ளது:—

''மலமென வேறொன் றில்லை
மாயாகா ரியம தென்னின்
இலகுயிர்க் கிச்சா ஞானக்
கிரியைக ளெழுப்பு மாயை,
விலகிடும் மலம் இவற்றை; வேறு
மன்(று); அதுவே ருகி
உலகுடல் கரண மாகி உதித்திடும்
உணர்ந்து கொள்ளே''

பின் வருவது மெய்கண்ட தேவர் அருளிச் செய்தது:—உயிர் மாயா காரியமாகிய உடம்பு முதலியவற்றைத் தனக்குக் காட்டாகக்கொண்டு பொருள்களைக் கண்டு வரும்; அஃது அவ்வுடம்பு முதலியவற்றைக் காட்டாகக் கொள்ளாதபோது ஒன்றையும் அறிவதில்லை. நெருப்பு (Heat energy) விறகு முதலியவற்றுள் யாதொன்றில் மறையினும் அதுவதுவேயாகத் தானென்பதொன் றில்லை எனும்படி நிற்கும். ஆயினும் விறகைக் கடைந்தவழி வெளிப்படுதலின் அஃது அழியாது உள்ளது என்பது உணரப்படும்; விறகைப்போல ஆணவம் உள்ளது; நெருப்பைப் போல உயிர் உள்ளது. ஆணவம் உயிரை அநாதியே மறைத்து, உயிர் என ஒன்று இல்லையெனும்படி அதனைத் தானாக்கிக் கொண்டு நிற்கும். வன்னியும் (நெருப்பும்) விறகும் பொருண்மையால் இரண்டாயினும், வன்னி காட்டத்துள் (விறகில்) மறைந்து நிற்கும்போது பொருள் ஒன்றே என நிற்றலின், அவற்றிடை உள்ள சம்பந்தம் இருமையின் ஒருமை எனப்படும் அத்துவிதமாம். உயிர்க்கும் ஆணவத்துக்கும் உள்ள சம்பந்தமும் அது.

''ஆணவத்தோடத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ''

என்னும் தாயுமான அடிகள் வாய்மொழி இங்குக் கருதற்பாலது.

''மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணாதேல்
ஆயாதாம் ஒன்றை; அதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றும் [காட்டம் போல்
தன்னைமலம் அன்றணைதல் தான்''

என்பது மேல் விவரித்த கருத்துள்ள உதாரணச் செய்யுள்.

இங்கு விளக்கப்பட்ட சகசமலம் ஒன்றாய், பல்வேறு வகைப்பட்ட உயிர்களின் அறிவைத் தடை செய்து நிற்கும் பல சத்திகளை உடையதாய், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய், செம்பிற்களிம்பும் நெல்லிற்கு உமியும் போல உயிரின் குற்றமாய் உள்ளது. இது வியாபக உயிர் அணுத்தன்மைப்படுமாறு செய்தலின் ஆணவம் எனப்படும். பசுத்துவம், பசு நீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி முதலிய காரணக் குறிகளால் வழங்கப்படுவது.

இதனை இங்ஙனம் கொள்ளாது, ஞானுபாவம் எனவும், பிராந்திஞானம் எனவும், தமோகுணம் எனவும், பஞ்சக்கிலேசத்தில் ஒன்றாகிய அவிச்சை எனவும், சிவசத்தி எனவும், உயிர்க்குணம் எனவும் கூறும் மதவாதிகளும் உளர். அவர் கூறுவனவெல்லாம் பொருந்தா என்பது விரிந்த நூல்களுட் கண்டு கொள்ளத்தக்கது.

முதல்வன் இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றலின் அநாதி முத்தன் எனப் பெயர் பெறுதல்போல, உயிர் இயல்பாகவே மலத்தைப் பற்றுதலின் அநாதி பெத்த சித்துரு எனப் பெயர் பெறும்.

உயிரைச் சடப்பொருள் என வைசேடிகரும், குணப்பொருளன்றி, அறிவு மாத்திரையேயாவது என்று சாங்கியரும், சுதந்திர அறிவுடையதெனப் பட்டாசாரியனும் (மீமாஞ்சகன்), தனக்கு நிலைக்களனாகிய உடம்பளவிற்று எனச் சமணரும், அணுவளவிற்று எனப் பாஞ்சராத்திரரும், உருவம் எனப் பௌராணிகரும், அருவம் எனப் பாதஞ்சலரும், அருவுருவம் எனக் கவுளரும், இன்னும் பலதிறப்பட வேறு பலரும் மயங்கிக்கூறுவர். அவர் கூறுவன எல்லாம் பொருந்தாமையைச் சிவஞான சித்தியால் உணர்க!

**இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.**

# திருவருட்பயன்

திரு. பூ. சமரபுரி முதலியார், தாம்பரம்.

திருவருட் பயன் என்னும் மெய்ஞ்ஞான நூல் சைவ சித்தாந்த சாத்திரம் பதினன்கனுள் எட்டாவதாக வைத்து எண்ணப் படுவது.

இது புறச்சந்தான குரவர்கள் நால்வருள் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய சித்தாந்த அஷ்டகம் என்னும் எட்டு நூல்களில் இரண்டாவதாக உள்ளது.

திருவருட்பயன் என்பது திருவருளினது பயனை விளக்கும் நூல் என விரியும். ஆறும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும்.

இந்நூல் பத்து அதிகாரங்களும், ஒவ்வோர் அதிகாரத்துக்குப் பப்பத்துக் குறளுமாக, நூறு குறள் வெண்பாக்களால் ஆக்கப் பட்டுள்ளது.

பத்து அதிகாரங்களாவன:—

1. பதிமுது நிலை
2. உயிரவை நிலை
3. பாசநிலை
4. அருளது நிலை
5. அருளுரு நிலை
6. அறியுநெறி
7. உயிர் விளக்கம்
8. இன்புறு நிலை
9. ஐந்தெழுத்தருள் நிலை
10. அணைந்தோர் தன்மை

இவற்றுள் முதல் ஐந்து அதிகாரங்கள் திருவருளைப் பற்றியும், பின் ஐந்து அதிகாரங்கள் திருவருளின் பயனைப் பற்றியும் விளக்குவனவாம்.

முதலைந்தும் முறையே, (1) திருவருளைக் கொடுக்கும் பதியின் தன்மையையும், (2) திருவருளைப் பெறும் அதிகாரத்தையுடைய உயிர்களின் தன்மையையும், (3) திருவருளைப் பெறுதற்குத் தடையாயுள்ளதும் திருவருளால் நீக்கக்கூடியதுமான மலத்தின் தன்மையையும், (4) திருவருளின் தன்மையையும், (5) திருவருளைப் பாலிக்கும் பேரருள்வடிவமாகிய ஞானகுருவின் தன்மையையும் விளக்குவன.

பின் ஐந்தும் முறையே, (6) உயிர் குருவருளால் பேரறிவைப் பெறும் தன்மையையும், (7) அதனல் உயிர் மலத்தினின்று நீங்கும் தன்மையையும், (8) அதனல் உயிர் பேரானந்தத்தைப் பெறும் தன்மையையும், (9) பேரானந்தம் பெற்றோர் சிவன் முத்த நிலையில் வாசனமலம் தாக்காமைப் பொருட்டு ஐந்தெழுத்து ஓதும் நிற்கும் முறைமையையும், (10) அணைந்தோர் தன்மையையும் கூறுவனவாம்.

### காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்

என்பது, ஆசிரியர் தாம் கூறப்புகுந்த நூல் இனிது முடியும் வண்ணம் ஏற்புடைக் கடவுளாகிய விநாயகப் பெருமானை வழுத்துவதாம்.

இதன் பொருள்:—சிவத்தை அடைதற்குரிய நல்ல கருணை என்னும் வெள்ளமதம் பொழியும் விநாயகப் பெருமானை நண்ணி வழிபடில், அவர் நம் உள்ளத்தின்கண் நண்ணி விளங்கி உண்மைப் பொருளை விளக்குவார். அதனல், ஞானக்கலையானது தானே விளங்கும் தன்மைத்து. கற்கவேண்டிய பொருள் அல்ல; திருவருளினல் விளங்க வேண்டியது என்பதாம்.

## நூல்

### முதல் அதிகாரம்—பதிமுது நிலை

முது பதி நிலை—மேலான இறைவனது இயல்பு. பதிக்கு மேன்மையாவது—

"கருங்கடல் ஏழையும், ஏழிரும் பொழில்களையும், எண் நீங்கு உயிர்களையும், அளவில் அண்டங்களையும் முளையின்றி விளைத்து, அம்மலரோன் தாதையை வகுத்தும்" விகாரம் அடையாதவனும், "முன்னேரில்லா முன்

ஞோன், பின்னும் இளமையும் அஃதா இயைந் தோன், வளமலி தோற்றம் ஈறு ஒன்று இல்லோ னும் உள்ளதே மேன்மையாகும். அத்தகைய பதிப்பொருளின் தன்மையைப் பத்துக் குறள் களினால் கூறுகின்றார்.

கடவுள் ஒருவரே, அவர் சிவபெருமான்.

அகரமானது மற்ற உயிரெழுத்துக்க ளுடன் கூடி அவற்றையும், உயிரெழுத்தால் அசைக்கப்படும் மெய்யெழுத்துக்களையும் அசைப்பதுபோல, அறிவுள்ளனவாகிய (சேத னப் பிரபஞ்சம்) உயிர்கள். அறிவில்லன வாகிய (அசேதனப் பிரபஞ்சம்) உடல், கருவி, உலகம், போகப்பொருள்கள் ஆகிய எல்லாப் பொருள்களினும் நிறைந்து அறிவே உருவமாகி என்றும் எங்கும் உள்ளவர்.

உயிர்கள் தன்னிலையாகிய பேரானந்த நிலையை அடைவதற்காக அருட்சத்தியோடு பிரிவில்லாது நிற்பர்.

எங்கும் நிறைந்திருப்பதாலும், ஆயி னும், (விறகில் நெருப்பும் பாலில் நெய்யும் நிறைந்திருப்பினும் எவ்வாறு நெருப்பும் நெய் யும் அறிய முடியாதோ அதுபோல்) அறி தற்கு அருமையாலும், (முறுகக் கடைந்த வழியே நெருப்பையும் நெய்யையும் பெறுவது போல், கசிந்த தொண்டினாலன்றிப்) பெறு தற்கு அருமையாலும், மிக்க அருளாலும் தமக்கு ஒப்பில்லாதவர்.

அவருடைய அருட்செயல்களாவன :— தன்னிடத்துச் சமவாய சம்பந்தத்தால் பிரிப் பின்றி நிற்கும் சிற்சத்தியினால் சங்கற்ப மாத்திரையால் அறிவுடையன அறிவில்லன வாகிய எல்லாவற்றையும் தோற்றுவித்தும், காத்தும், மறைத்தும், சர்வ சங்கார காலத்தில் ஆணவமலத்துடன் ஒடுக்கியும், மலபரிபாகத் தில் ஆணவமலத்துடன் மற்ற மாயை கன்மங் களையும் ஒருங்கே போக்கியும் அருளலைச் செய்வன. அக்கடவுளே தான் உயிர்களுக்கு நீங்காத புகலிடமாய் உள்ளவர்.

அவர்—சிவம், சத்தி, நாதம், விந்து ஆகிய நான்கு அருவத் திருமேனிகளையும், சதாசிவன் என்னும் அருவுருவத் திருமேனி யையும் மகேச்சுரன், உருத்திரன், திருமால், அயன் என்னும் உருவத் திருமேனிகளையும், ஞானமார்க்கத்தார்க்குரிய (மேற்கூறிய மூன்று உருவங்களையும் கடந்த) அறிவு வடிவமாகிய அஞ்செழுத்து வடிவத்தையும் உடையவர்.

அருவத்திருமேனி ஆன்மாக்கள் தியா னித்தற்கும், அருவுருவத்திருமேனி பூசித்தற் கும், உருவத்திருமேனி வழிபட்டு வணங்கு தற்கும் முதல்வன் கொள்கின்றனன். (சிவ நெறிப் பிரகாசம்-92-ம் செய்யுள்; ஞானமிர் தம்-அகவல் 65.)

மேற்கூறிய திருமேனிகள், நமக்குச் சரீரம் வினைக்கு ஈடாகக் கடவுளால் கொடுக் கப்பட்டதுபோல, அவர்க்கு வேறொருவரால் கொடுக்கப்பட்டனவல்ல; அருளையே திரு மேனியாகக் கொண்டார். தனக்குமேல் ஒரு தலைவன் இல்லாதவர்.

பதிப்பொருளோடு பதியல்லாத பொருள் கூடியிருத்தலால் பதிப்பொருளின் வியாபகம் (நிறைவு) கெடுமோ எனின் அன்று; சூடு பொருந்திய நீர்போல, இறைவன் எல்லா உலகங்களிலும் எல்லா உயிர்களிலும் வேற றக் கலந்து நிற்பினும், அவற்றின் தன்மை சாராமலும் அவற்றைக் கடந்தும் நிற்பர்.

பேரன்பில்லாத தேவர்களாலும் காணாத சிவபெருமான் எங்கும் நிறைந்து நீங்காத ஞானமாய், பரஞானத்தால் தன்னைப் பார்த் திருக்கும் அயரா அன்புடை அடியவர்கட்கு மறையாமல் வெளிப்பட்டு நின்று பேரின்பத் தைக் கொடுத்தருளுவர்.

தம்மை அன்போடு வழிபடுவார்க்குப் பேரின்பத்தை அளிப்பர்; வழிபடாதார்க்குப் பேரின்பத்தைக் கொடார். இதனால் விருப்பு வெறுப்பு உள்ளவர் என்று கருதவேண்டா. சர்வ ஆன்மாக்களுக்கும் சுகத்தையே செய் வர்; அதனால் சங்கரன் என்றும் திருப் பெயரை உடையவர்.

அவர் ஞானமயமாய் நின்று, பிறவிக் குக் காரணமான ஆணவமல நோயைத் திருவருள் என்னும் மருந்தை ஊட்டித் தீர்க் கும் மருந்தாவர். ஆகையால் அவரை இடை விடாது அன்போடு நினைத்துப் பூசித்து வழி படுவார்க்கு நிலையான முத்திச் செல்வத்தை அளிப்பர். இதை ஐயமின்றித் தெளிந்து அவர்க்கு ஆட்படவேண்டும் என்று கூறிய வாறும்.

**இரண்டாம் அதிகாரம்—உயிரவை நிலை**

உயிர் அவை = பலவாய உயிர்களின், நிலை = தன்மை. இதனால் மேலதிகாரத்தில் கூறப்பட்ட பதிப்பொருள் ஒன்றே; அவரால் ஆளப்பட்டுப் பேரின்பத்துக்குரிய உயிர்கள் பலவாம் — எண்ணிறந்தனவாம் என்பது பெறப்படும்.

உயிர் அவை என்பதிலுள்ள அவை என்னும் பன்மைச்சொல் உயிர்கள் பல என்பதைக் காட்டி நிற்கிறது; உயிர்களின் தொகுதியைக் குறித்து நிற்கிறது. 'அவன், அவள், அது எனும் அவை' என்பதிலுள்ள அவை என்னும் சொற்போல.

ஆன்மாக்கள் எண்ணிறந்தன. தொகை கூறுமிடத்து, முத்தியடைந்த உயிர்களின் தொகை இதுவரையில் பல பிறவிகளில் பிறந்து வாழ்ந்த நாட்களின் தொகைக்குச் சமமாகும்; முத்தியடைதற்குரிய உயிர்களின் தொகை இனிப் பல பிறவிகளிற் பிறந்து வாழும் நாட்களின் தொகைக்குச் சமமாம் என்றதனால், சென்ற நாட்களும் கணக்கில் அடங்கா, வரும் நாட்களும் கணக்கில் அடங்கா. அதுபோல் உயிர்களும் எண்ணில் அடங்கா என்பதாம்.

துறந்தார் துறப்போர் என்பதனால், உயிர்கள் அநாதியாகவே மலபந்தத்தை உடையன என்பதும், அப்பந்தம் நீக்கப் பெறும் தன்மையது என்பதும் உணர்த்திய வாறும்.

இவ்வுயிர்கள் மூன்று வகைப்படும்:—

(1) **விஞ்ஞானகலர்:** மேலான ஞான முடைமையால் **கலாதிகள்** இல்லாதார். ஆணவமலம் ஒன்றே உடையவர். அதன் சத்திகள் சூக்குமமாய் உள்ளன. அவற்றால் மாத்திரம் பிணிக்கப்பட்டவர். மாயை கன்மங்கள் உளவேனும் அவற்றால் பிணிக்கப் படார் ஆதலால், ஒருமலம் உடையவர் என்று சொல்லப்படும்.

(2) **பிரளயாகலர்**—பிரளயத்தில் கலாதிகளினின்றும் நீங்கினோர். அசுத்தமாயை (பிரகிருதி மாயை) நீங்கி ஆணவம் கன்மம் என்னும் இருமலம் உடையவர். இவர்களுக்கு ஆணவமலச் சத்திகள் தூலமாய் நிற்கும். மாயை உளதேனும் அதனால் பிணிக்கப் படார். ஆகவே இருமலம் உடையார் என்று சொல்லப்படும்.

(3) **சகலர்**—கலாதிகளுடன் (ச = கூட) ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலமுடையவர். மும்மலங்களாலும் பிணிக்கப்பட்டவர். ஆணவமல சத்திகள் தூலதரமாய் நிற்கும்.

மூவகை உயிர்களும் மூல மலமாகிய ஆணவமல சம்பந்தம் உடையவர்களே. ஆயினும் அசுத்தமாயையின் சம்பந்தம் உடைய சகலர், தாம் ஆணவமலத்திற் கட்டுண்டிருப்பதை உணரார். மற்ற விஞ்ஞானகலர் பிரளயாகலர் என்னும் இருவகையினரும் மாயை சம்பந்தம் இல்லாதபடியால், தாம் ஆணமலக் கட்டுடையவர் என்பதை உணர்ந்து, அதினின்றும் நீங்கி நலமடைய வேண்டுமென்று முயல்வார்.

உயிர் தம்வசம் இல்லாதன; சுதந்திரம் இல்லாதன. உயிர் நனவு நிலையாகிய சாக்கிரத்திலே கண்ட பொருள்கள் மனத்திலே பதிந்து விடுகின்றன. அவைகள் கனவு நிலையாகிய சொப்பனத்தில் காணப்படுகின்றன. அத்தன்மை உயிரின் பிராரத்த வினைக்குத் தக்கவாறு மாறும். துன்பம் அநுபவிக்க வேண்டியிருந்தால், உயிரோடிருக்கும் நண்பர் ஒருவர் இறந்தவர் போலவும், மகிழ வேண்டியிருப்பின் இறந்தவர் உயிருடன் இருப்பவர் போலவும் தோன்றும். இதனால் நனவில் கண்டதைக் கனவில் அப்படியே காணமுடியாது என்பதும், உயிர் அற்ப வலியுள்ளது என்பதும், சுதந்திரம் அற்றது என்பதும் பெறப்படும். சுதந்திரம் என்பது விரும்பியபடி நடத்தற்கும் எல்லாவற்றையும் ஆளுதற்கும் வேண்டிய வல்லமை. இவ் வல்லமை உயிருக்கு இல்லை என்பதைக் கூற வந்த ஆசிரியர் "திண் திறல்" என்று இகழ்ச்சிக் குறிப்பால் தெரிவிக்கின்றனர்.
(நான்காஞ் செய்யுள்)

உயிர்க்குச் சுதந்திரம் இன்மையை ஔவையார்,

"ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்டு ஒன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

என்றார்.

இதனால் உயிர் மலத்தில் கட்டுண்டு அந்தக் கரணங்களோடு கூடிநின்று ஐந்து அவத்தைப்படும் என்பதை உய்த்துணர வைக்கின்றார். உயிர் ஐந்தவத்தைப்படுதல் உயிரின் பொதுவியல்பு.

உயிர்கள் சிற்றறிவுடையன; கேவல நிலையில் ஒன்றுமே அறியா; கலை முதலியவற்றோடு கூடிய சகல நிலையில் ஐம்பொறிகளில் ஏதாவது ஒன்றின் துணையில்லாமல் ஒரு விஷயத்தையும் அறியமாட்டா: தாமே அறியும் அறிவில்லாதன; பொறிகளின் துணை கொண்டு அறியும் அறிவு சிற்றறிவே. ஆகையால் ஆசிரியர் இத்தகுதியுடைய ஆன்மாவுக்கு "அறிவு" என்று கூறும் பெயர் எவ்வளவு பிழையுடையது என்று இகழ்ச்சிக் குறிப்புப்பட "அற நன்று" என்று கூறுகிறார்! (5-ம் செய்யுளில்–புந்தி என்பது ஆகுபெயராய் உயிரை உணர்த்திற்று.)

உயிர்களுக்கு இயல்பாகவே இச்சையும் ஞானமும் கிரியையும் உள்ளன. இல்லையாயின், ஆணவத்தோடு நிற்கும்போது அதனால் மயங்கித் தீய இச்சையினாலும் அறிவினாலும் தீய செயல்களைச் செய்வதும், சிவத்தோடு நிற்கும்போது நல்ல இச்சையினாலும் அறிவினாலும் சிவானந்தத்தை அனுபவிப்பதும் இல்லையாம். எதுபோலவெனின், சூரியன், நெருப்பு முதலிய ஒளிப்பொருள்களும், மயக்கத்தைச் செய்யும் இருளும். பலவகைப் பொருள்கள் நிறைந்துள்ள உலகமும் இருக்கின்றன. ஆனால் கண்ணுக்குக் காணும் தன்மை இல்லையாயின் என்ன பயன் உடைத்தாகும்? நாம் ஒளியினால் நன்மை அடைவதும் இல்லை; இருளால் மயங்குவதும் இல்லை. அப்படியே ஒளியாகிய சிவமும், இருளாகிய ஆணவமும் உலகமாகிய மாயா காரியமும் விழித்திருக்கும் கண்போன்ற ஆன்மாவுக்கு இச்சை அறிவு செயல்கள் இல்லையாயின் பயன்படா.

உயிர்கள் சதசத்து (சத் அசத்) என்று சொல்லப்படும். அதாவது, சத்துப்பொருளாகிய சிவத்தோடு சேரின் சத்தாகியும் அசத்துப் பொருளாகிய உலகத்தோடு சேரின் அசத்தாகியும் இருக்குமதனால் சதசத்து என்று சொல்லப்படும்.

ஞானமயமாகிய சிவம் நிலையற்றனவாகிய அசத்தாகிய மாயைப்பொருள்களைப் புதிதாகச் சுட்டி அறியவேண்டியதில்லை; அது என்றும் அறிவது ஆதலால், அசத்துப் பொருளாகிய சடப் பொருள்களை ஒன்றையும் என்றும் அறியமாட்டா. ஆகையால் சடப்பொருளோடு சேர்ந்து அசத்தையும், சிவப்பொருளோடு சேர்ந்து அவருடைய ஞானத்தைக்கொண்டு அதையும் அறியும் தன்மையுடையன ஆன்மாவே.

மேற்கூறியவைகளால் உயிர் பளிங்கு போன்றது. பளிங்குக் கல் எந்த நிறத்தோடு சேருகிறதோ அந்த நிறமாகத் தோன்றுவது போல், உயிர் எந்தப் பொருளைச் சேருகிறதோ அந்த மயமாக விளங்கும் ஆகவே ஆன்மா இருளாகிய ஆணவத்தோடு சேர்ந்திருக்கும்போது ஆணவத்தின் காரியமாகிய அஞ்ஞானமயமாகியும், ஒளியாகிய சிவத்தின் திருவருளோடு சேரும்போது ஞானமயமாகியும் விளங்கும். இதையே ஆன்மா சார்ந்ததன் வண்ணமாயுள்ளது என்பர். இது ஆன்மாவின் சிறப்பியல்பாகும்.

சூரியவொளி ஊமனது(கூகை) கண்ணிலும், மனிதர், ஆடு, மாடு, பூனை முதலிய உயிர்களின் கண்ணிலும் வேறுபாடின்றி ஒரே தன்மையாகவே செல்லுகிறது. ஆனால் அவ்வொளியைக் கூகை காணமாட்டாது; மனிதர் முதலியோர் காணக்கூடியவராய் உள்ளார். இவ்வேறுபாடு சூரியவொளியினது அல்ல; அவற்றின் கண்களிலுள்ள வேறுபாடேயாம். அதுபோல, சிவம் எல்லா உயிர்களிடத்தும் வேறுபாடின்றி ஒரே தன்மையாகக் கலந்து நிற்கிறது. அவ்வாறு இல்லையானால் சிவபெருமான் பட்சபாதம் உடையவர் என்று சொல்லப்பட்டு அவருடைய பேரருள் உடைமைக்கும் சர்வ வியாபகத்தன்மைக்கும் பேரறிவுடைமைக்கும் இழுக்காகும். ஆயினும் சில உயிர்கள் அவரை அறியத்தக்கனவாயும் மற்றுஞ் சில அவரை அறியமாட்டாதனவாயும் உள்ளன. இது அவ்வுயிர்களின் வேறுபாடான நிலையினாலாவதாகும்.

ஆணவமலச் சார்புள்ள உயிர் சிவத்தை அறியமாட்டாது; திருவருட் சார்புள்ளது சிவஞானக் கண்ணால் சிவத்தை அறியும். இவ்வுண்மையை "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்" என்றும் "நின் அருட் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே" என்

றும் அநுபவஞானிகள் கூறிய அருள்வாக்குகள் வலியுறுத்துவனவாம்.

ஆகையால், பிறந்து அளவில்லாத துன்பங்களைப் பல்லூழிகாலம் தாங்கி நிற்கும் உயிர்கள் துன்பங்களினின்றும் நீங்கித் திருவருள் ஞானத்தைப்பெற்றுப் பேரின்பத்தை அடைவது எக்காலம்? அந்தோ! அத் திருவருளைப் பெற முயற்சிக்கலாகாதா? என்று இரங்குகின்றார் ஆசிரியர்.

நாம் அவ்வாறு முயல்வோமாக!

### மூன்றாம் அதிகாரம்—பாசநிலை

பாசம் என்றால் ஆன்மாவைக் கட்டும் மலங்கள். அவை மூன்றாகும்—ஆணவம், மாயை, கன்மம் என்பன. இவற்றின் தன்மையைக் கூறும் பகுதியாகும் இது.

அடர்ந்து வருகின்ற பிறவித் துன்பமும், அது நீங்கிப் பெறப்படுவதாகிய முத்தி இன்பமும், பிறவித்துன்பத்திற்குக் காரணமாகிய மும்மலங்களும், முத்தி இன்பத்திற்குக் காரணமாகிய சிவமும் என்றும் உள்ள பொருள்களேயாம். இவைகளை இல்லாதவைகள் என்று சொல்லுவது சுருதி, யுக்தி, அநுபவம் என்னும் அளவைகளுக்குப் பொருந்தாது.

இவைகளை உள்பொருள் என்று கொள்வது சற்காரியவாதமாம். சற்காரியவாதத்தை மேற்கொண்டு நெறிப்பட உண்மையை உணர்த்துவது சைவசித்தாந்தமேயாம். (சற்காரியவாதம் என்பது உள்ளது காரியப்படுதல் என்னும் பொருளை உடையது. இதனை ஞானமிர்தம் - 'தந்து முதல காரகம்' என்னும் அகவல். 22 விளக்குகின்றது).

இனி, ஆணவம் உண்டு என்று எவ்வாறு துணியலாம் எனின்—இருள் நிறைந்த இரவில் நடக்கும் வழிப்போக்கர்களுக்கு வழியிலே உள்ள சுவர், கிணறு, பாம்பு முதலியன விகற்பமாகத் தோன்றாமல் ஒரே இருள்மயமாய்த் தோன்றுதல்போல, எந்த ஒரு பொருள்—உயிரைப் போன்றதொரு முதற்பொருள்—இருந்துகொண்டு, உயிருக்குக் கடவுளையும் உயிரையும் தளையையும் தோன்றவொட்டாது, அதனுடைய இச்சை அறிவு செயல்களை மறைத்து நிற்கிறதோ—எந்தப் பொருள் நீங்கினால் உயிர் மூன்று பொருள்களின் உண்மை நிலையை விளக்கமுற உணர்ந்து சிவத்தின் சுயம்பிரகாச ஞானானந்த பரிபூரணத்தைப் பெறுமோ—அந்தப் பொருள்தான் ஆணவம் என்பது. ஆணவம் உயிரின் வியாபக அறிவைத் தடைப்படுத்தி அதை அணுத்தன்மை ஆக்குவது.

#### ஆணவமலத்தின் இலக்கணம்

செம்புடன் கூடிய மிக்க பெரிய களிம்பு போல, ஆன்மாவுடன் சகசமாய்க் கூடிக் கிடந்து, பாச, பசு, பதிகளாகிய பதார்த்தங்களின் உண்மையை அறியவொட்டாது, உயிர் அறிவை மறைப்பது ஆகும்.

"தூய நினைவைத் தூமொழியைத்
தூய தொழிலைத் தோற்றாது
தீய நினைவைத் தீமொழியைத்
தீய தொழிலைத் தவத்தோற்றும்
ஆய தனிஆணவப் பகையின்
அரட்டைத் தணிப்ப உயிர் அடுக்கும்
மாயை இரண்டு திறனாகும்
சுத்தம் அசுத்தம் என மாதோ"

—(தணிகைப் புராணம்
நந்தி உபதேசப்படலம்.)

(செய்யுள் 106 - 105-ம் பக்கம் பார்க்க)

ஆணவ மலம் உயிரின் குணமன்று; உயிர்க்குக் குற்றமாகும்.

| | பதி | பசு | ஆணவம் |
|---|---|---|---|
| 1. | மெய்ப்பொருள் | மெய்ப்பொருள் | மெய்ப்பொருள் |
| 2. | முற்றறிவுடையது | சிற்றறிவுடையது (அறிவிக்க அறிவது.) | சடப்பொருள் |
| 3. | சர்வ வியாபகமுடையது | வியாப்பியம் (இறை வியாபகத்தில் அடங்கியது). | வியாத்தி (உயிரின் வியாபகத்துக்கு மேற்படாமலும் குறையாமலும் சம வியாபகமாயுள்ளது.) |
| 4. | தானே இயங்குவது | தானே இயங்காது (இயக்க இயங்குவது.) | தானேயும் இயங்காது, இயக்கவும் இயங்காது. |

**ஆணவத்தின் காரியங்களாவன:—**

(1) மோகம் நல்லறிவை மயக்குவது - குருவினாலும் நூலினாலும் தீயன என்று அறிந்தவற்றில் நீங்காமல் நிற்கும் மயக்கம்.

(2) மதம் (அ) தன்னைப்போல் ஒருவரும் இல்லை என மதித்தல்.
(ஆ) உலக இன்பங்களை மேலாக மதிக்கச் செய்வது.
(இ) தனக்கு ஒரு குறைவுமில்லை என்று நினைக்கச் செய்வது.

(3) இராகம் (அ) கிடையாத பொருளிடத்தில் ஆசையை உண்டாக்குவது.
(ஆ) உலக இன்பங்களில் ஆசையை உண்டாக்குவது.

(4) விஷாதம் (கவலை) (அ) கிட்டிய பொருள் பிரிந்தபொழுது வருந்தச் செய்வது
(ஆ) அனுபவித்த இன்பம் பின்பு கிடையாதபோது வருந்துவது.

(5) தாபம் (அ) (சோஷம்) சுற்றத்தை விட்டுப் பிரிந்ததற்கும் பிரிவதற்கும் ஆற்றாமை.
(ஆ) பற்றுள்ளவர்களிலிருந்து நீங்கவேண்டிய காலத்தில் வருந்துவது.

(6) வாட்டம் அவ்வாற்றாமையால் முகமலர்ச்சியின்றி வாடுதலும் உடம்பை மெலியச் செய்தலும்.

(7) விசித்திரம் (அ) எச்செயலும் வினைவழி நிகழ்கின்றது என்று எண்ணாது தான் செய்ததாகவும் பிறர் செய்ததாகவும் எண்ணுவது.
(ஆ) ஆன்மா தன்னிலுள்ள குற்றங்களைக் கடவுளில் ஏற்றித் தன்னுடைய பெருமைகளை வியந்து அதிசயிக்கச் செய்வது.

''மதமே மோ கமே விராகம் கவலை தா
பந்தான் வாட்டம்
இதமுறு விசித்திரமென் றேழாகும்
மலத்தின் செய்கை''

என்பது ஓர்க.

ஆணவம் மிகக் கொடியது; இருளைப் பார்க்கிலும் கொடிது. இருளானது மற்றைய பொருளைக் காட்டாது மறைத்தாலும், தான் ஒரு பொருள் (தான் இருப்பதால் பிற பொருள் தெரியாது என்று தெரிவிக்கும் ஒரு பொருள்) இருக்கிறது என்று காட்டும். அதனால் மக்கள் பயந்து விளக்குத் துணையோடு போவார்கள்; விளக்கில்லையாயின் சாக்கிரதையாய்ச் சாவதானமாக மெல்லப் பார்த்துப் பார்த்துப் போவார்கள்.

ஆனால், ஆணவமோ பிற பொருள்களாகிய ஆன்மாவையும் கடவுளையும் காட்டாததுமன்றி, தான் ஒரு பொருள் இருப்பதாகவும் காட்டாது. எல்லா அனர்த்தங்கட்கும் காரணமாயுள்ளது; மகாவஞ்சகமுடையது; அதன் வஞ்சகத்தில் சிக்கியே உயிர்கள் வருந்துகின்றன. ஒருவன் ஒரு தீய செயலைச் செய்ய முனைகிறபோது, அது சரியான செயலல்ல என்று நினைத்தாலும் ஆணவத்தின் காரியமாகிய அறியாமை முனைத்து நின்று செய்ய வைக்கிறது. என்றால் அதன் கொடுமையை என்னென்று சொல்வது!

இந்த ஆணவம் எப்பொழுது உயிரைப் பற்றியது எனின், உயிர் என்று உண்டோ அன்றே (அநாதியே) அதைப் பொருந்தி, அதன் அறிவை மறைத்துச் சிவனது திருவடித்தாமரையைப் பெறுமளவும் நீங்காது நிற்கும்.

மாயை கருமங்களைப்போல் நீங்கிப் புணர்ந்தது அன்று; இவ்விரண்டு மலங்களும் சர்வசங்கார காலத்து உயிரைவிட்டு ஒதுங்கி நின்று, மகா சிருஷ்டியில் அதைச்சாரும். ஆனால், ஆணவம் சர்வசங்கார காலத்திலும் அதோடு நீங்காது நிற்கும்.

இன்னொன்று அறிய வேண்டியது. இறைவன் ஆன்மாவுடன் கலந்து நிற்கின்றானே அவனை இவ்வாணவம் பந்திக்குமோ எனின், பந்திக்காது. கடலில் உள்ள நீரில் உப்பு கலந்திருந்தாலும் கடலைப் பற்றாதவாறு என அறிக.

உயிர் தன்னிடத்தே அடங்கியிருக்கப் பட்ட ஆணவத்தை ஏன் அறியாது எனின், கற்புடைய பெண்டிர் பிற ஆடவர்களோடு பேசாமல் தம் சொந்த நாயகனுக்கே தம்மைக் காட்டி நிற்பர்; இத்தன்மைக்கு முற்றும் மாருகக் கற்பில் பெண்டிர் பலரைப் புணர்ந் தும், தம் கற்பின்மை தம் கணவர்க்குத் தோன்ருமல் நடந்து கொள்வார். அதேபோல் ஓர் உயிரைப்பற்றிய ஆணவம் பிற உயிர்களைச் சேர்ந்தும் அந்த உயிருக்குத் தன்னைக் காட் டாமல் நிற்கின்றது. அதனுடைய சக்தி பல வகைத்து. 'ஒன்றதாய் அநேக சக்தி உடைய தாய்'' என்றனர் அருணந்தி சிவனுர். நித்திய அநித்தியத்தை அறிய முடியாமல் செல்கிறது.

நாம் அறிய வேண்டுவன:—

கடவுள் ஒருவர்; உயிர் அவருக்கு அடிமை; இவ்வுண்மையை அறியவொட்டா மற் செய்வது ஆணவம்; அதனின்றும் நீங்கி இறவாத இன்பத்தை அனுபவிப்பதே உயிர் பெறவேண்டிய பேறு; அதற்குச் சாதனமா யுள்ளன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு ஒழுக்கங்கள். இவற்றை அறியாமற் செய்வது ஆணவம். அந்தோ! இவ்வாணவத்தின் வலிதான் என்னே! என்று இருளார் என்று உயர்திணை விகுதி சேர்த்துக் கோபமாகக் கூறுகிருர் ஆசிரியர். (இதுதிணை வழுவமைதி-செறலின் கண் வந்தது-செய் யுள்-6.)

ஆணவமலம் இல்லை யென்ருல் வரும் ஏதம் என்னை? ஆணவம் இல்லை என்ருல் அறிவு மயமான உயிர் அஞ்ஞானத்தைப் பொருந்துவானேன்? சிற்றறிவும் சிறுதொழி லும் உடையனவாகா. தற்சுதந்திரத்தை இழந்து இந்திரியங்கட்கு ஏவற்பட்டு அவை இயக்கும் வழி இயங்க வேண்டியதில்லை. பிறப்பு இறப்புக்களான் துன்பங்கள் அடைய வேண்டியதில்லை. பசி, நோய் முதலிய துன் பங்களையும் பொருந்த வேண்டியதில்லை.

இனி, ஆணவம் உயிர்க்கு இயற்கை எனின், கரிக்குக் கறுப்பும் பாலுக்கு வெளுப் பும் இயற்கை. இவ்வியற்கையை மாற்றுதற் குரிய பொருள் இருக்குமானல், கறுப்புத் தன்மையும் வெளுப்புத்தன்மையும் நீங்கும் போது பொருளும் கூடவே கெட்டுப்போ மன்ருே? ஆணவம் திருவருளால் கெடும் போது ஆன்மாவும் கூடக் கெடவேண்டு மன்ருே? ஆனல் முத்தி நிலையில் கெடா திருந்து பேரின்பத்தை அநுபவித்தல் உண் மையானபடியால், ஆணவம் உயிரின் இயற் கைக்குணமன்று என்பது தெளியப்பெறும்.

ஆணவம் இடையே வந்து உயிரைக் கூடிற்று என்று கூறலாகாதோ எனின் ஆகாது. நடுவே வந்து பொருந்துவதற்குக் காரணம் வேண்டும். ஆணவம் முன்னே வேறு இடத்தில் இருந்து பின் ஆன்மாவைக் கூடினதாயின், அந்த ஆணவத்தை நிலையை மாற்றி உயிருடன் சேர்ப்பதற்குக் காரணம் இருக்கவேண்டும். அப்படி ஒன்றும் இல்லை. ஏனெனின், பொருள்கள் மூன்று-ஆணவம், ஆன்மா, கடவுள். இவற்றுள் ஆணவமும் உயிரும் அல்லாமல் எஞ்சி நிற்கும் பொருள் கடவுளே. அவரோ பொருள் உடையவர். உயிருக்குத் துன்பத்தைத்தரும் ஆணவத்தை அதனுடன் சேர்க்கமாட்டார். உயிரே ஆண வத்தைத் தேடிச் சேர்த்துக்கொண்டது எனின், உயிர் அறிவுடையது; தனக்குத் துன் பத்தைத் தரக்கூடிய ஒரு பொருளைத் தேடிச் சேர்த்துக்கொள்ளாது; தாம் சாவ மருந்துண் பார் அறிவுடை உலகில் உண்டோ? இனி ஆணவம் தானே வந்து உயிரைக் கூடிற்று எனின், அது சடப்பொருள்; தானே வந்து கூடமாட்டாது. ஆகையால் ஆணவம் உயிரை இடையே வந்து சேரவில்லை என்பது துணியப்படும்.

அன்றியும், தூய்மையான உயிரை ஆணவம் இடையே கூடிற்று எனின், அது பல சாதனங்களினுலும் நீக்கப்பட, உயிர் முத்தி அடைந்த பின்னரும், அது வந்து உயி ரைச் சேரக்கூடும். அப்படிச் சேர்வதில்லை என்பது அநுபவ சித்தாந்தம்.

ஆகையால் ஆணவம் உயிரின் இயற் கைக் குணமுமன்று, உயிரை இடையே வந்து சேர்ந்ததுமன்று, உயிர் உள்ள ஞான்றே அதைப்பற்றியுள்ள குற்றமாகும்; செம்பிற் களிம்பு போல.

அநாதியாயின் ஒருக்காலும் நீங்காது எனின், அற்றன்று; பூதவிருள் மேலிட்ட காலத்து விளக்கு ஒளி இருளைச் சற்றே நீக் கும்; சூரியவொளி முற்றும் நீக்கும், அது போல, ஆணவ இருளை மாயையினின்றும் தோன்றும் கலாதிகள் சற்று நீக்கி, ஆன்

மாவை இச்சையிலும், அறிவிலும், செயலிலும் செலுத்தும். இவ்வாறு பிறவிதோறும் விளக்கம் அடைய, குருவருளால் ஆணவ மலம் முற்றும் நீங்கும்.

இதனால் ஆணவமலம் நீங்கும் என்றும், பூதஇருளை விளக்கொளி ஏகதேசமாகவும், சூரிய ஒளி முற்றும் நீக்குவதுபோல், மாயை ஆணவத்தை ஏகதேசமாகவும், குருவருள் முற்றும் நீக்கும் என்றும் அறியலாம்.

பூத இருள் நீங்குமளவும் விளக்கு பிரகாசித்து நிற்பதுபோல் ஆணவ இருள் பரிபாக முறுமளவும் உயிரின் கன்மத்துக்கிடாக, மாயை தனுகரண புவன போகங்களாக விரிந்து, கன்மம் உள்ளவரையில் சிவித்து நிற்கும். சூரியன் தோன்றி விடிவளவில் விளக்கொளி மழுங்கிப் போதல்போல, இருவினையொப்பு மலபரிபாகம் உண்டான விடத்து, அருள் ஒளி தோன்றி உயிர் முத்தி நிலை பெறும்வரை மாயையும் கன்மமும் ஆணவ இருளை ஒருவாறு நீக்கக்கூடிய அறிவைக் கொடுக்கும் கருவிகளாக நிற்கும்.

## நான்காம் அதிகாரம்—அருளது நிலை

மேல் மூன்றும் அதிகாரத்தில் ஆணவ மலம் உயிரினது அறிவை மறைத்து, அறியாமைக்குக் காரணமாய். அறியவேண்டிய பொருளாகிய இறைவனை அறியவொட்டாமற் செய்வது என்று கண்டாம். அத்தகைய அறியாமையை நீக்கிச், சிவத்தின் ஒப்பற்ற இன்ப நிலையை ஆன்மாக்கள் பெறுதற்குத் துணை செய்யும் திருவருட்சத்தியின் தன்மையை விளக்குவது.

கோடை காலத்தில் உச்சிவேளையில் பாலை நிலத்தில் செல்வானுக்குத் தாங்குதற்கரிய நீர்வேட்கை உண்டாகுமாயின் அவனுக்கு அப்போது இன்றியமையாது வேண்டும் பொருள் தண்ணீரேயாம். அதைப் பெறுதற்கு எதையும் கொடுக்க விரும்புவான். அந்தத் தண்ணீரைப் பார்க்கிலும் மேலானதும் ஒப்பானதுமான பொருள் இல்லை. அதுபோல் ஆணவத் துன்பத்தில் அகப்பட்டு அதினின்றும் நீங்கி உய்யுமாறு எங்ஙனே என்று ஏங்குகின்றார்க்குத் திருவருளைப் பார்க்கினும் ஒப்பும் உயர்வும் உள்ள பொருள் இல்லை.

உயிர்களுக்கு உணவுப் பொருள் முதலியவைகளைக் கொடுத்தும், அவைகளை அனுபவிக்கச் செய்தும், ஒளியைக் கொடுத்தும் துணை செய்கின்ற சூரியனைப்போல, கன்மங்களை வளர்த்தும் அவற்றைத் தொலைப்பதற்காக இன்பத்துன்பங்களை அனுபவிக்கச் செய்தும் அவ்வனுபவத்தால் ஆணவத்தின் வன்மையைக் குறைத்து ஞான ஒளியை மேலாக விளக்குவதாய் எல்லா ஆன்மாக்களிடத்தும் நிற்பது திருவருளாம்.

மாயையின் காரியமாகிய உடல் சடம், அது ஒன்றையும் ஒருபோதும் அறியாது. உயிர் சிற்றறிவுடையது: தானாக ஒன்றையும் அறியாது. இதனால் திருவருள்தான் அறிந்து உயிர்க்கு அறிவிக்கும் தன்மையதாகும். இவ்வாறு துணை செய்யும் திருவருளை உயிர்கள் அறியாமல் இருக்கின்றனவே என்? பாற்கடலில் திரிகின்ற மீனானது பாலைக்குடிக்காது கிழாகிய சந்துக்களையும் வேறு இழிந்த பொருள்களையும் தின்று சிவிக்கும் முறைமை போல், உயிர்கள் அருட்கடலிலே இருந்தும் சிவபோகத்தைப் புசிப்பதைவிட்டுச் சிற்றின் பங்களைத் தேடி உலக போகத்தில் விழுந்து அழுந்திச் சனன மரணத் துன்பத்தில் ஆழ்கின்றன.

துணையாகக் கூடவே வருகின்றவனை அறியாது செல்லும் வழிப்போக்கனைப் போலவும், உயிரிடத்தே பொருந்தியுள்ள ஐம்பொறிகளை அவைகட்கு முதலாய் நின்று நடத்துவதே உயிரேயாயினும் அவ்வுயிரைத் தமக்கு உணர்த்தும் துணையென்று உணராத ஐம்பொறிகளைப் போலவும், ஆன்மா திருவருளாலே காரியப்பட்டும் திருவருளினாலே காரியப்படுவதை அறியாமல் இருக்கின்றது. பூமி ஆதாரமாக விருந்தும் அதை மறந்து திரிவார் போல, ஆன்மா திருவருளால் தொழிற்பட்டும் திருவருளை அறியாது இருக்கின்றது. என்ன அறிவீனம்!

மலைமேல் நின்றுகொண்டு மலையைத் தேடுவார்போலவும், நிலத்தில் நின்றுகொண்டு அதைத் தேடுவார் போலவும், ஆகாயத்துள்ளே சஞ்சரித்துக்கொண்டு அதைத் தேடுவார் போலவும், திருவருளிலே தங்கி அதைத் தேடுவார் தம்மைத் தாம் அறியாதவர் ஆவர். இவர்போல் பேதையர் இலர். திருவருளின் உண்மை உபகாரத்தை உணர்ந்து அதைத் தேடுபவர்கள் எளிதில் உணர்வார்கள், காண்பார்கள், பெறுவார்கள்.

நிறைந்த நீர் நிலையில் கழுத்தளவு நின்று இருந்தும், நீரைப்பருகாது நாவறண்டு நிற்பதையும், எங்கும் விடிந்து இருள் நீங்கிய பின்பும் பிறவிக்குருடனுக்கு இருளாயே இருப்பது போலவும் அளவோடு கலந்து நின்றும் அதனால் வரும் பேரின்பத்தை உணராது பொய்வழியில் தலைமையுற்று நிற்பது உயிர்களின் தன்மையாம். திருவருள் அறியத்தக்கதாய் இருந்தும், கொஞ்சமும் முயற்சி செய்யாமல், பொய் வழியிலேயே ஆன்மாக்கள் செல்லத் தலைப்படுகின்றன என்பதைக் குறிக்கவே . "கள்ளத்திறைவர்" என்றார் (செய். 8)

திருவருளை அறிதற்கு ஞான நூல்களைக் கேட்டுச் சிந்தித்தும் தெளியவேண்டும். கேட்கும்போது பரப்பமைந்து நிறைந்த ஊக்கத்தோடும், அன்போடும், இன்போடும் கேட்கவேண்டும். மன வொடுக்கமின்றிக் கேட்கின் உண்மைப் பயன் பெறமுடியாது; சனன மரணம் நீங்காது. உறியில் உள்ள பாற்சட்டியின்மேல் ஓரத்தில் நிற்கின்ற பூனை பாலைக்குடித்துப் பசிதீராமல் இறப்பில் ஓடும் கரப்பைத்தின்னப் பாற்குடத்தினின்றும்பாய, கரப்பையும் பெறாது பாலையும் இழந்தது போலாம். ஒருக்கால் கரப்பைப் பெற்றாலும் அது சிறு உணவேயாகும். சிறு உணவை நாடி, பெரும் பயனளிக்கும் பாலைக் கைவிட்டதுபோல், பேரின்பம் பயக்கும் ஞானநூற் கேள்வியையும் அதனால் வரும் திருவருளையும் இழந்து, சின்னீர இன்பங்களைக் கொடுக்கும் விஷயங்கள் மேல் உணர்வைச் செலுத்துவோர்களது புல்லறிவாண்மை என்னே!

இவ்வளவு காலம் அருளோடு கலந்து நின்றும், அதை உணரமாட்டாத உயிர்க்கு வீடுபெறும் தகுதி சிறிதும் இல்லை. இருவினையொப்பு வந்தாலன்றித் திருவருள் ஞானம் பிரவேசியாது என்பதாம்.

ஐந்தாம் அதிகாரம்—அருள் உருநிலை

ஞான வடிவாகிய அருளாசாரியனது தன்மை.

அருளின் தன்மையை உண்மையாக உணர்ந்த உயிர் அதைப் பெறுதற்கு அவாவி நிற்கும்போது இருவினையொப்பு உண்டாகும். அதாவது நல்வினைப் பயனாகிய இன்பத்தினிடத்தும் தீவினைப் பயனாகிய துன்பத்தினிடத்தும் விருப்பும் வெறுப்பும் இன்றி அவற்றைச் சமமாய் நோக்குதல். இந்நிலையில் ஆணவமலச் சத்திதேயும். அதாவது அதன் காரியமாகிய மோகம் முதலிய கெட்ட குணங்கள் உயிர் அறிவைவிட்டு நீங்கும். இதை மலபரிபாகம் என்பர். இந்நிலையில் திருவருள் குருவடிவாக வெளிப்படும்.

பெத்த நிலையிலும் முத்தி நிலையிலும் நீர் நிழல்போல் உயிரைவிட்டு நீங்காது கலந்து நின்ற திருவருள் இதுவரை உயிர் தன்னை அறியாதபடி படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல்களைச் செய்து, உயிரைப் பாதுகாத்து, முறையாகப் பக்குவப் படுத்தி வந்தது. அதுவே, உயிரின் பக்குவம் அறிந்து அனுக்கிரகத்தைச் செய்ய உயிர் காணக்கூடிய குருவடிவம் கொண்டு வரும். இதை ஆசிரியர் "நீங்காத கோ அறியாமை உண்ணின்று அளித்தது. அதுவே, காணுங் குறியாகி (அளித்தது)" என்கிறார்.

"இம்மைப்பொழுதும் என்னெஞ்சில்
நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன்
தாள் வாழ்க"

என்னும் சிவபுராணத்து அடிகளையும்,

'அருந்துணையை-அருமருந்தை பெருந்துணையை

என்னும் அப்பர் திருவாக்கையும் உன்னுவோமாக.

ஒரு வீட்டிலுள்ள ஒருவனுக்கு நோய் வரின், அந்த நோயை அவனுடைய நன்மையைக் கருதியவர்களே அறிந்து நீக்க முயல்வார்கள். வேறு யாரும் அறிந்து துணை செய்யார். அதுபோல், உயிரைப்பற்றிய ஆணவமல நோயை, உயிருடன் வேறற நின்று அதற்கு இதம் செய்வதையே தன் கடனாகக் கொண்ட திருவருளே அறிந்து தீர்க்கவல்லது. ஆகையால் அது குருவடிவு கொண்டு வந்து பிறவி நோயை நீக்க அனுக்கிரகிக்கும்.

திருவருள் இதுவரையில் படைத்தல் முதலிய நான்கு தொழில்களையும் மறைந்து நின்று செய்ததுபோல், அருளல் என்னும் தொழிலைச் செய்ய, மானுடச் சட்டையில் தன்னை மறைத்துவந்த குருவடிவத்தைப் பக்குவமுள்ள மாணவகன் அன்றி, பக்குவமில்லாத உலகர் அறிவார்களோ? அறியமாட்டார்.

"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க"

என்னும் திருவண்டப்பகுதி—61-63 அடிகளைக் காண்போமாக.

பக்குவம் இல்லாதோர் ஆணவமலத்தால் மறைப்புண்ட அறிவுடையராய், நிலையற்ற உலக இன்பத்தை நிலையுடையதாக எண்ணி அதில் அழுந்திய கருத்துடையராய், ஞானமாகிய ஒண்பொருளைப் பெறுதவராய் இருக்கின்றனர். ஆகவே, அறிவு மயமாகிய திருவருளையும் அத்திருவருளை நிலைக்களமாகக் கொண்டு நின்று செலுத்தும் குருவடிவத்தையும் ஒரு சிறிதும் அறியற்பாலர் அல்லர். நூலறிவையும் உயிரறிவையும் கடந்து நிற்கும் திருவருளின் தன்மையை அவற்றின் துணைகொண்டு அறியவல்லரோ?

புதிய மானைப்பிடிக்க விரும்பும் வேடன் பழகிய மானைக் காட்டிப் பிடிப்பதுபோல், சகலர்களாகிய மனிதரைத் தன் வசப்படுத்த வந்த திருவருள் மனித வுருவாகிய குருவடிவு என்னும் போர்வையுள் மறைந்து வந்தது. இந்த உண்மையைப் புவியில் உள்ள பக்குவமில்லாதோர் அறியார். ஒரு சாதாரண மனிதனென்றே எண்ணி மாழாந்து பிறவி இறவிகட்கே ஆளாகின்றனர். இவ்வுருவை "உள்ளப்படாத திருவுரு" என்கிறுர் மணிவாசகனுர் (திருத்தெள்ளேணம்-செய் 16.)

ஒரு சிலர் ஞானசாரியனுல் எங்களுக்கு என்ன பயன் என்று சொல்லுகிறுர்கள். ஞானசாரியனைத் தவிர வேறு யாருக்கு ஞான நூற்பொருள் அநுபவத்தில் தெரியும். ஆதலின் ஞானநூற் பொருளின் உண்மையை உண்மையில் உணர்த்தும் ஞானசாரியர் இன்றியமையாதவர். அவரே ஐயம் திரிபு அறியாமை நீங்கத் தெளிய உணர்த்திச் சிவத்தோடு கூட்டுபவராவர்.

ஒருவனைப் பாம்பு கடித்தால், அந்த விஷம் கீரிப்பிள்ளை அவனுக்கு நேரே வந்து நிற்பினும் நீங்காது. தன்னைக் கீரியாகப் பாவிக்கும் மாந்திரீகன் பார்வையால் நீங்கும். இது அனுபவம். இந்த முறைமைபோல், ஆணவ மலத்தால் மூடப்பட்ட ஒருவனைத் திருவருள் நேரே நின்றுலும் அம்மலம் நீங்காது. திருவருள் ஒரு குருவடிவத்தை இடமாகக்கொண்டு பார்வையாலும் பாவனையாலும் ஆணவத்தை நீக்கும்.

விஞ்ஞான கலருக்குச் சிவபெருமான் அவர்கள் அறிவில் நின்று அருள் செய்து மலத்தை நீக்கிச் சிவஞானத்தை உதிக்கச் செய்வார். பிரளயாகலருக்கு மான்மழு அபய வரதங்களோடு கூடிய நான்கு திருக்கரங்கள், காளகண்டம், மூன்று கண்கள் முதலியவற்றேடு உள்ள திருமேனி கொண்டு முன்னிலையாய் நின்று மலத்தையும் கன்மத்தையும் நீக்கிச் சிவஞானத்தை உதிக்கச் செய்வர். சகலருக்குக் குருவடிவாய் வந்து ஐந்து வகை தீட்சைகளைச் செய்து மும்மலங்களையும் நீக்கிச் சிவஞானத்தைப் படிப்படியாகப் பிரகாசிக்கச் செய்வர்.

முப்பத்தாறு தத்துவங்களையும் ஆறு அத்துவாக்களையும் கடந்த வீட்டு நெறியைப் பேரறிவாளனுகிய சிவபிரானே குருவடிவாக வந்து அருளுவன். அவன் அவ்வாறு அருள் செய்யாவிட்டால், அந்த நெறி அருளும் வகையை ஆர்தாம் அறிவர்? எவரும் இலர்.

சூரிய ஒளி இல்லையானுல் சூரியகாந்தக் கல்லில் அக்கினி தோன்றுது; அதுபோல குருவடிவின்றி ஆன்மாவில் ஞானம் பிரகாசியாது. சூரியன் இல்லாமல் சூரியகாந்தக் கல்லில் அக்கினி தோன்றுவதானுல், குருவில்லாமல் ஞானம் தோன்றும். இரண்டும் இல்லை.

இதனுல் அருட்குருவின் இன்றியமையாமையும் பயனும் கூறப்பட்டன.

---

குற்றுலம்: பைம்பொழில் ஸ்ரீ திருமலைக்குமாரசுவாமி தேவஸ்தானம் பெண்கள் உயர்நிலைப்பள்ளியை ஸ்ரீ திருக்குற்றுலநாதசுவாமி தேவஸ்தானத்தைச் சேர்ந்த கட்டிடங்களில் 10—10—62ல் திரு. டி. எஸ். சங்கரநாராயணபிள்ளை, பி. ஏ., பி. எல், அவர்கள் தலைமையில் திரு. எஸ். வைத்தியநாத முதலியார் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

வீரவநல்லூர்: சுவாமி பூமிநாதர் மரகதாம்பாள் திருக்கோயில் திருமணத்திருவிழா 15—10—62 முதல் 24—10—62 வரை நடைபெற்றது.

குமாரவயலூர்: சுப்பிரமணியசுவாமி கோயிலில் கந்தசஷ்டி விழா 29—10—62 முதல் 4—11—62 வரை நடைபெறும்.

# தசாவதாரம்

[திரு. K. R. ராஜகோபாலன், B Sc. (Hons), தாம்பரம்]

திருமால் பரம், வியூஹம், விபவம், அந்தர் யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்ற ஐந்து நிலைகளிலே காட்சியளிக்கிறார் என்பது வைஷ்ணவர்களின் கொள்கை முதல் நிலையான 'பரம்' என்பது நித்திய சூரிகள் சூழப் பர வாசு தேவனாக வைகுந்தத்தில் வீற்றிருக்கும் நிலையாகும்; பாற்கடலில் வாசுதேவன், சங்கருஷ்ணன், பிரத்தும்யுநன், அநிருத்தன் என்ற நான்கு வடிவங்களோடு இருத்தலை 'வியூஹம்' என்கிறார்கள். 'விபவம்' என்பது பக்தர்களைக் காக்கவும், தீயவர்களை ஒழிக்கவும் திருமால் எடுத்துள்ளதும் எடுக்கக் கூடியதுமான அவதாரங்களைக் குறிக்கும். எல்லா உயிர்களிலும் சூக்குமமாக இறைவன் கலந்து இருத்தலைக் குறிப்பதுதான் அந்தர்யாமித்துவ நிலை. கலியுகமான இந்நாளில நாம் வழிபட்டு உய்யவேண்டுமென்றே ஏற்பட்ட மூர்த்திகளே அர்ச்சாவதார நிலையாகும். இவைகளில் விபவநிலை, அல்லது அவதாரங்களைப் பற்றிச் சிறிது ஆராய்ந்து கூறும் இக் கட்டுரை.

கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு விளக்கிக் கூறுவதாவது— எவ்வெப்பொழுது தர்மத்திற்குக் குறை ஏற்படுகிறதோ அவ்வப்பொழுதெல்லாம் அதைக் காத்து அது தழைத்தோங்கச் செய்ய நான் என்னையே அடிக்கடி உண்டாக்கிக் கொள்வேன். இறைவன் பூண்ட பல உருவங்களிலும், இன்று மக்களிடையே அதிகமாகப் பரவி, வழக்கத்தில் இருப்பவை தசாவதாரங்கள் என்ற பத்து அவதாரங்களே ஆகும். ஆனால், கால அடைவில் நோக்குங்கால், வெவ்வேறு காலங்களில் அவதாரங்களை வெவ்வேறாகக் கருதி வந்தார்கள் எனத் தெரிகிறது. பாகவதத்தில் நாராயணீயப் பகுதியில்-வராஹம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், ஸ்ரீராமன் கிருஷ்ணன்—என்கிற ஆறே விபவங்களைக் காண்கிறோம். அதே நூலில் சற்றுப் பின்பு பத்து அவதாரங்களைப் பற்றிய குறிப்பும் உள்ளது! புராணங்கள் எல்லாம் ஒரே சமயத்தில் இயற்றப்படவில்லை; ஒரே புராணத்தின் பல பகுதிகள் வேறு வேறு காலங்களில் இயற்றப்பட்டுள்ளன; அல்லாமல் இடைச் செருகல்களும் உள்ளன என ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். ஹரிவம்சத்திலும் ஆறேதான்; வாயுபுராணத்தில் ஓர் இடத்தில் பன்னிரண்டும், மற்றொரு இடத்தில் பத்தும் (97,98 அத்தியாயங்கள்) ஆகக் குறிப்புக் கிடைக்கின்றது. வராஹபுராணம், அக்னி புராணங்களில் 10 தான். பாகவத புராணத்தில் மூன்று இடங்களில் மூன்று எண்ணிக்கைகளை — 22,23,16-காண்கிறோம்— இவைகளில் நாரதர், கபிலர், தன்வந்திரி, ரிஷபதேவர் முதலிய பெயர்களும் உள்ளன. ஆஹிர்புதன்ய ஸம்ஹிதையில் 39 அவதாரங்களைப் பற்றிய குறிப்புள்ளது. ஆக அவதாரங்களின் எண்ணிக்கையும், பெயர்களும் காலத்திற் கேற்ப மாறிவந்துள்ளன என்பது தெளிவு.

திருவிக்ரமாவதாரம்

புராண வாயிலாக நாம் அறிவது மேற் கூறப்பட்டுள்ளது. புராணங்கள் இயற்றப் பட்ட காலங்கள் முதலியனவற்றைப்பற்றி ஆராய்ச்சியாளர்களிடையே கருத்து ஒற்றுமை இல்லையாதலின் இதைப்பற்றி வேறுவிதச் சான்றுகளையும் நோக்கலாம். அது மாதிரியான ஒன்று பல்லவர் காலக் கல் வெட்டு மூலம் நமக்கு கிடைத்துள்ளது. (சு. கி. பி. 650) அதில்—மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனன், பரசுராமன், தாசரதி ராமன், பலராமன், புத்தர், கல்கி என்பவை கள் பத்து அவதாரங்களாகக் கூறப்பட் டுள்ளன. மஹாபாரதத்திலும் மேற்கூறிய பட்டியலே உளது. இதினின்று நாம் ஏழாம் நூற்றுண்டு வாக்கில் அவதாரங்களின் எண் ணிக்கை "பத்து" என்று வரையறுக்கப் பட் டிருக்கும் என்று துணியலாம். இந்தக் கூற் றிற்கு ஆதாரமாக மற்றொரு விஷயத்தையும் எடுத்துக் காட்டாகக் கூறலாம்:- தற்காலத் தில் வழக்கத்திலிருக்கும் தசமமுறை (பத்து அடுக்கு முறை-Decimal System) முதலில் நம் நாட்டில்தான் தோன்றியது என்று கணக்கறிஞர்கள் முடிவு கண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கிடைத்துள்ள சான்றுகளில் முக்கியமானதும், பழமை வாய்ந்ததும் இதே காலத்தை(சுமார் 7-ம் நூற்றுண்டைச்)சேர்ந் ததே! அத்தகைய முக்கியமான கண்டு பிடிப்பு கணக்குத் துறையில் புரட்சிகரமான தாக இருந்து, அந்த ஊக்குவிப்பினால் மற்றத் துறைகளிலும் உந்தப்பட்டு, அவதாரங்கள் பத்தாக மதிப்பிட்டு வந்திருக்கலாம் என்று துணிகிறோம். இந்தக் காலத்திற்குப் பிறகு அவதாரங்கள் பத்து என்றே மதிக்கப்பெற்று வந்தன என்பதும், நம் எண்ணத்தை வலு வடையச் செய்வதே.

பத்து அவதாரங்களின் முக்கியத் தன்மைகளைச் சுருக்கமாகப் பின்வருமாறு கூறலாம்:- மீன்: ஹயக்கிரீ வாஸுரவதம், வேதலாபம், ஸத்யவிரதர் ரக்ஷணம்; ஆமை: அமிருதம் கிடைக்கக் கடைதல், அரக்கர் களின்தோல்வி; பூமியைச் சுமந்து இருத்தல்; **வாரஹம்**; இரணியாட்சன் ஸம்ஹாரம், பூமியை உத்தாரணம் செய்தல்; **நரசிம்மம்**: இரண்ய கசிபுவைக் கொன்று, பிரகலாதனைக் காத்தல்; **வாமனன், திரிவிக்ரமன்**:- பலியின் கர்வபங்கம், தேவர்களைப் பேணுதல், **பரசுராமர்**: துஷ்ட க்ஷத்திரியர்களை அழித்தல், கச்யபர் முத லியவர்களுக்குப்பூமி அளித்தல்: **தாசரதிராமன்**: ராவணனை அழித்தல், மக்களைக் காத்தல்; **கிருஷ்ணன்**: கம்சன் முதலியவரின் வதம், பாண்டவர்களைக் காத்தல். **புத்தர்**: தைத்யர் களை மோகிக்க வைத்தல், ஸுரர்களுக்கு நல் போதனை அருளல்: [பலராமன்: தன் தம்பி யான கண்ணனுக்குத் துணைபுரிதல், கலப்பை யைத் தரித்தல்] **கல்கி**: துஷ்டர்களை அழித்தல், சத்ய யுகத்தைத் தோற்றுவித்தல்.

முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயார்-என்பவர்கள் சுமார் 5-7 நூற்றுண்டுக்கிடையே வாழ்ந்தார்கள். அவர் கள் பாசுரங்களில் அதிகமாக வராஹம், நர சிம்மம், வாமனன், ராமன், கிருஷ்ணன் -இந்த அவதாரங்களைப் பற்றியே குறிப்புகள் கிடைக்கின்றன. பிற்பாடு தோன்றிய மற்ற ஆழ்வார்கள் பத்து அவதாரங்களைப் பற்றி யும் பாடியுள்ளனர்:

மீனோடு ஆமை, கேழல் அரி, குறள் ஆய்,
முன்னம் இராமனாய்,
தானாய், பின்னும் இராமனாய்,
தாமோதரன் ஆய், கற்கியும் ஆனான்
தன்னை

—என்று திருமங்கை ஆழ்வார் கூறுவதே சான்று. (பெரியதிருமொழி 8-8-10) சாதார ணமாகத் தென்னாட்டு வழக்கம் பலராமரை அவதாரமாகக் கொள்ளல்; வட நாட்டில் புத் தரைக் கூறுவர்.

வரலாற்று வாக்கில் மீன், ஆமை அவ தாரங்கள் பின்பே தோன்றியிருத்தல் வேண்டும் என்பதற்குச் சான்றுகளை மேலே கூறினோம். ஏன் 'மீன்' முதல் அவதார மாகக் கருதப்பட்டது என்ற இரண்டாவது கேள்வி எழும். இதைப்பற்றித் தெளிவான குறிப்புகள் இல்லை. பிரளய காலத்தில் எங் கும் ஒரே வெள்ளமாக இருந்த போது பக வான் வராஹரூபம் எடுத்துப் பூமியைக் கடலி னின்று (பாதாளத்திலிருந்து) மீட்டார் என் பது ஓர் வாதம்: ஆக ஆதி வராஹத்தை முதலில் கொண்டதின் கருத்து யாது? இதற்கு விடையாக ஒரு ஊகத்தைக் கூற லாம்— அந்த நாட்களில் உலகில் உயிர்கள் எவ்வாறு தோன்றின? முதற்கண் தோன்றிய உயிர் யாது? பிறகு அது எவ்வாறு மாறி யது? என்பனவற்றைப் பற்றிச் சிந்தனைகள் தோன்றியிருத்தல் கூடும். முதலில் எங்கும்

நீர்மயமாக இருந்ததால் இறைவனின் முதல் விபவம் நீர்வாழ் உயிராக இருப்பதுதான் இயல்பு என்று எண்ணி, மீனை முதல் அவதாரமாகக் கருதியிருக்கலாம். இரண்டாவதான கூர்மம் (ஆமை) நிலம்-நீர் இரண்டிலும் வாழும் உயிர் ஆகும். மூன்றாவதான வராஹம்— ஏனம்-வெகுபெரிதான உருவம் கொண்டது. நாம் வாழும் இப்பெரிய நிலப் பரப்பானது அந்த ஏனத்தின் கோரைப்பல் நுனியில் ஒரு சிறு புள்ளிபோல் தோன்றியது எனின் அதன் ஆகிருதியை நாம் கற்பனைதான் செய்து கொள்ள வேண்டும்! [உலகில் உயிர்கள் தோன்றியது ஏறக்குறைய இது போல்தான் என்று தற்கால விஞ்ஞானிகள் முடிவு கண்டுள்ளனர். இதற்கு (Theory of Evolution) "எவல்யூஷன் கொள்கை" என்பர். மகா வராஹத்தைப் போன்ற நீண்டு உயர்ந்த உருவம் உள்ள பிராணிகள் சுமார் 10,000 ஆண்டுகட்கு முன் வாழ்ந்து வந்தன என்பதற்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன. தமிழ் மறை ஆழ்வார்கள் மிகவும் உவந்து பாடிய அவதாரங்கள் வராஹம், நரசிம்மம், வாமனன் என்பவை— இராம, கிருஷ்ண அவதாரங்களைத் தவிர.

அடுத்த அவதாரமாம் சிங்கப்பெருமான் தனிச் சிறப்பு வாய்ந்தவர். இதனை ஆழ்வார்கள் "அழகிய சிங்கம் "தெள்ளிய சிங்கம்" என்று அனுபவித்துள்ளனர். விலங்குகளில் தனி காம்பீர்யமும், உருவ அழகும் பொருந்தி, "மிருகேந்திரன்" எனச் சிறப்பாக மதிக்கப்படுவது சிங்கம்; எல்லா உயிர்களிலும் மேலானதாகக் கருதப்படுவது மனிதன் தான். இவ்விரண்டு சிறப்புகளும் ஒருங்கே பெற்று வீற்றிருக்கும் ஆளரியின் (நரசிங்கத்தின்) அழகினை வியந்துதானே ஆகவேண்டும்! தீமை செய்தவர்களுக்கு அச்சத்தை ஊட்டக்கூடியதாயினும், அன்பர்கள் கண்களுக்கு அழகுருவாய்த் தோன்றும் ஆளரியின் சிறப்பே சிறப்பு!

ஐந்தாவதான பரசுராமனின் பெயரே அச்சுறுத்தும் தகையது. அரசர்களின் ஆதிக்கம் வலுத்து, அவர்கள் மக்களின் நலத்தைப் பேணாமல் தம் சுகத்தையே மேலாகக் கருதிவந்த காலை, வெகுண்டெழுந்து, அவர்களை அழிக்க முற்பட்டு அதில் வெற்றிகண்ட அந்தணர் பரசுராமர் ஆவார்! சினத்தால் உந்தப்பட்டுத் தன் கோடரியினால் அரச குலத்தை நாசமாக்கிய வீரராயினும் தந்தை சொல் தட்டாத் தவப்புதல்வராகவும், தாயிடம் மிகுந்த அன்புடையவராகவும் விளங்கிய உத்தம புத்திரன் பரசுராமர்.

இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும், நம் நாட்டு மக்களிடையே பரவி, அவர் தம் வாழ்க்கையினை நல்வழியில் திருப்பிய அளவிற்கு வேறெந்த அவதாரங்களும் செய்தில என்பது யாவரும் அறிந்ததே. அடுக்கடுக்காக, பல அரசர்கள், சிற்பிகள், தத்துவ மேதைகள் பக்திப் பெருக்கால் நாட்டில் மறுமலர்ச்சி உண்டாக்கிய பெரியார்கள் முதலாக, பலப்பலருக்கும் ஊக்குவிக்கும் திறனாய் (சக்தியாய்) இவ்விரண்டு அவதாரங்களும் அமைந்துள்ளன. நம் நாட்டில் பலவேறு மொழிகளில் சிறந்த காவியங்கள் என்று கருதப்படும் இலக்கியப்படைப்புகளில்பெரும் பாலனவை இராம கதையையும், கிருஷ்ணன் கதையையும் தழுவியனவைகளாகும்.

புத்தரை ஒன்பதாவது அவதாரமாக முதலில் சேர்த்த பெருமை, காஷ்மீரத்தைச் சேர்ந்த அரும்பெரும் கவிஞர் க்ஷேமேந்திரரைச் சேரும். இவர் 11-ம் நூற்றாண்டின் கண் வாழ்ந்தவர். பிறவியில் சைவராக இருந்து பிறகு வைஷ்ணவராக மாறிப் பல அரிய நூல்களை எழுதியவர். தென்னாட்டுக் கதைகளில் பலராமரை (கிருஷ்ணனின் அண்ணனை) ஒன்பதாவது அவதாரமாகக் கொள்ளுதல் மரபு.

பத்தாவது அவதாரமான 'கல்கி' இன்னமும் நிகழவிருக்கிறது என்பர். நம்நாடு வேற்றுவர்களால் அடிக்கடி துன்புறுத்தப் பட்டு, நம் மதமும், மதச்சின்னங்களான கோயில் முதலியவைகளும் அழிக்கப் பெற்று வந்தபோது — இத்தகைய இன்னல்களிலிருந்து ஆஸ்திகர்களைக் காக்கப் பகவானே தான் அவதரிக்க வேண்டும் என்று இறை அன்பர்கள் எண்ணி இந்த அவதாரத்தைச் சேர்த்தனர் போலும்!

## பாடல்கள் முதலியன

பற்பல மேதைகள் தசாவதாரங்களைப் பற்றித் தம் கவித்திறன் வெளிப்படப் பாடியுள்ளார்கள். க்ஷேமேந்திரர் "தசாவதார ஸ்தோத்திரம்" என்ற நூலை இயற்றி யுள்

ளார். ஆழ்வார்கள் பாடல்கள் எளிமையும் சுவையும் பொருந்தியனவாய்ப் பக்திப் பெருக் குள்ளவைகள். அவற்றுள் ஒன்றை முன்பே எடுத்துக் கூறியுள்ளோம். பின்பு வந்த ஆழ்வார்களில் பலர் ஹம்ஸாவதாரத்தை (அன்னம்)யும் பற்றிப் பாடியுள்ளது ஒரு விசேஷமாகும் :-

"அன்னமும் மீனும் ஆமையும் அரியும்
ஆய எம் மாயனே!-(பெரியதிருமொழி 2-7-10
"அன்னமும் கேழலும் மீனும் ஆய ஆதியை)
(-,,-9-2-10';

"அன்னமும் மீன் உருவும் ஆளரியும் குறளும்
ஆமையும் ஆனவனே;
—(பெரியாழ்வார் திருமொழி 1-5-11)

ஜயதேவரின் "அஷ்டபதி"களைக்கேட்டறி யாதவர்கள் மிகச்சிலரே இருத்தல் கூடும். அவர் தம் விருப்ப மிக்க கடவுளான (இஷ்ட தேவதை) கண்ணன் தான், பத்து அவதாரங் களையும் எடுத்து உலகினையும் மக்களையும் காத்தவன் என்று தசாவதாரஸ்தோத்திரத் தில் சிறப்பித்துக் கூறியுள்ளார். பலராமர், புத்தர் இருவரும், இவர் பட்டியலில் இடம் பெறுகிறார்கள். த்வைத மதகுருவான மத் வாச்சாரியாரும் தம் தசாவதார ஸ்தோத்தி ரத்தில் புத்தரைப் பற்றிக் குறிப்பிடுகிறார்— "அரசர்களுக்கு அஞ்ஞானத்தை உண்டாக்கித் தேவர்களுக்கு ஸுகத்தை தந்தவர் புத்தர். எனப் போற்றப்படுகின்றார்.

வைஷ்ணவர்களில் இராமானுஜருக்குப் பிறகு மிகச் சிறந்தவர் என்று மதிக்கப்படுப வரும், கவிதார்க்கிக சிம்மம் எனப் போற்றப் படுபவரும் ஆகிய வேதாந்த தேசிகர் என்னும் வேங்கடநாதர் என்ற மேதை 12-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் தம் தசாவ தார ஸ்தோத்திரத்தில் ஒவ்வொரு அவதாரத் திற்குச் சுலோகமாகச் சுவை நயமும், சொல் நயமும், பொருள் செறிவும் அமையப் பாடி யுள்ளார்.

இசைக்கலைப் பேரறிஞர்களும், பத்து அவதாரப் பாடல்கள் இயற்றியுள்ளார்கள். தென்னாட்டில் இன்று சங்கீதம் இயற்றப் பட்டு வரும் முறையை வகைப்படுத்திய வரும் 14-ம் நூற்றாண்டின்கண் வாழ்ந்த வரும் ஆகிய புரந்தரதாஸர் பல அரிய கீர்த் தனங்களும், மங்களங்களும் இயற்றியுள்ளார். அவைகளில் ஒன்று—இறைவன் உடலில் ஒவ் வொரு பாகத்திற்கும் ஒவ்வொரு அவதார மாகச் சிறப்பித்துக் கூறியுள்ள மங்களப் பாட்டு-மிக அழகாக அமைந்ததாகும். மற் றும் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இசை வல்லுநர்களான முத்துஸ்வாமி தீட்சிதரும், சுவாதித்திருநாள் மகாராஜாவும் தசாவதார இராகமாலிகைகளை இயற்றினார்கள் என்று அறிகிறோம். இவைகள் தற்கால இசை அறிஞர்களாலும், நாட்டியக் கலைஞர்களாலும் நம் நாட்டு மேடைகளில் கையாளப்பட்டு வருவதை நம்மில் பலர் அறிந்திருப்பர்.

## கோயில்கள், சிற்பங்கள்

இலக்கிய படைப்புக்கள்தாம் சிற்பம் முதலிய கலைகளுக்குத் தோற்றுவாய் என்று பலர் கூறுவர். கவிஞன் தன் கவித்திறனைக் காட்டும் கவிபாட, அதன் சுவையை அனுப வித்த சிற்பியானவன் அந்த உயிர்க் காவி யத்தை உயிரற்ற கல்லில் உயிரோவியமாக அமைக்கிறான். இதுபோல் தசாவதாரத் திருவிளையாடல்களும் சிற்பங்களில் அமைக் கப் பெற்று நம் நாட்டிற் பல இடங்களில் கிடைக்கின்றன.

இவைகளில் முக்கியமானது திருவரங் கத்தில் உள்ள தசாவதாரக் கோயில் ஆகும். அங்குக் கொள்ளிடக் கரையில் ஒரே நீள் சதுர கர்ப்பக் கிருகத்தில் பத்துமூர்த்திகளும் திருக்கோலம் கொண்டுள்ளனர். கோயி லுக்கு மண்டபம் உண்டு, விமானம் இல்லை. இன்றும் பூசை நடைபெற்று வருகிறது. இங்குதான் வேதாந்த தேசிகர் தம் தசாவ தார ஸ்தோத்திரத்தை இயற்றினார்.

காஜுராஹோ என்று புகழ்வாய்ந்த இடத் தில் "பரத்ஜி" (Bharatji) கோயில் என்று அழைக்கப்படும் சூரியன் கோயில் உள்ளது. அங்கே கர்ப்பகிருகத்தின் தெற்கே உள்ள ஒரு விஷ்ணு சிற்பம் வெகுவிசித்திரமானது— 11 தலைகள் உள்ள இந்தச் சிலையின் நடுவில் இரு மருங்கிலும் பத்து அவதாரங்களைக் காட் டும் தலைகள்! கர்நாடகத்தில் ஐஹொளெ (Aihole) என்னும் இடத்திலுள்ள 6-ம் நூற்றாண்டுக் கோயிலில் தசாவதாரச் சிற்பங் கள் உள்ளன, எல்லோரா குகைக் கோயில்

களில் தசாவதாரக் குகை என்று ஒன்று உளது; அதில் இருக்கும் சிற்பங்கள் மிக அழகு வாய்ந்தவை. காஜுராஹோவை ஆண்ட சாண்டெல்லா அரசர்கள் திருமாலின் அவதாரங்களில் மிகுந்த ஈடுபாடுடையவர்கள். அங்கு வராஹம், நரசிம்மம், வாமனன் முதலிய சிற்பங்கள் பலப்பல உண்டு. சதுர் புஜர் கோயில் நுழைவாசலில் இரு பக்கங்களிலும் தசாவதாரங்களைச் செதுக்கியுள்ளனர். தென்னாட்டுக் கோயில்களில் முன் அனேகமாக ஒரு கோபுரம் இருக்கும்; விஜயநகர மன்னர்களாலும் நாயக்க அரசர்களாலும் கட்டப்பெற்றவைகள்; சாதாரணமாக நுழைவாசலின் இரு பக்கச் சுவர்களில் தசாவதாரங்கள் அமைக்கப் பெற்றுள்ளதை நாம் காணலாம்.

இறைவன் எப்பொருளிலும், எப்பொழுதும் உளான்; அவனுக்கு மேம்பட்டது, தாழ்ந்தது என்பது இல்லை ; எப்பிறவியையும் ஒரே சீராக நோக்கும் திருமால் தன் அன்பர்களைக் காத்தருளும் பொருட்டுப் பல திருவுருவங்களைத் தாங்கி, நன்மைகளை இயக்கி வருகிறார் என்பதனை எண்ணி எண்ணி இன்புற்று, நாம் நம் வாழ்க்கையினை மேலும் பயனுள்ளதாகச் செய்யுமாறு தூண்ட உதவும் தசாவதாரங்களைப் பற்றிய சிந்தனை.

---

## ஸ்ரீ ராஜகோபாலசுவாமி தேவஸ்தானம், மன்னார்குடி.

### பஞ்சராத்ர ஆகம பயிற்சி பூர்த்திவிழா 14—10—62 ஞாயிறு மாலை 4 மணிக்கு.

சென்னை அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் தலைமையில் திரு. ராஜகோபாலசுவாமி ஆலயத்தில் ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகமப்பயிற்சி பூர்த்திவிழாவும், திரு. ராஜகோபாலசுவாமி சுப்பிரபாத அரங்கேற்று விழாவும் வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பெற்றது.

கடவுள் வணக்கத்திற்குப் பிறகு ஆலய நிர்வாக தர்மகர்த்தா திரு. டி. எஸ். சுவாமிநாத உடையார், எம். எல். ஏ., அவர்கள், அறநிலைய ஆணையர், அதிகாரிகள், விழாவிற்கு வருகைதந்த மடாதிபதிகள், பல ஆலய டிரஸ்டிகள், ஸ்தானீகர்கள், அர்ச்சகர்கள், பொதுமக்கள் யாவரையும் வரவேற்று பயிற்சியாளர்களால் சுப்ரபாதம் பாராயணம் செய்யப்பெற்றது.

பயிற்சிபெற்ற மாணவர்கள் பரீட்சாதிகாரியான திரு. வி. விருத்தகிரீசன், எம்.ஏ., எல். லிட்., எம். எல்., திருநெல்வேலி அட்வகேட் திரு. பட்சிராஜய்யங்கார், ஸ்ரீரங்கம் ஸ்ரீ பாஞ்சராத்ர பூஷணம் ஸ்ரீ ராகவபட்டர், திரு. ஆகம பயிற்சியின் அவசியத்தைப் பற்றியும், அர்ச்சகர்கள் சன்னதிகளிலும், சன்னதிக்கு வரும் சேவார்த்திகளிடமும் நடந்துகொள்ளும் முறைபற்றியும் மிக விரிவான சொற்பொழிவாற்றினார்கள்.

பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு ஆணையர் அவர்களால் நற்சான்று பத்திரம் வழங்கப்பெற்றது. மன்னார்குடி முதல்தெரு எஸ்டேட்டு திரு. ஏ. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களால் முதலில் தேறிய மூன்று மாணவர்களுக்கு முறையே ரூ. 15/-, ரூ. 12/-, ரூ. 8/-. அன்பளிப்பாக கொடுக்கப்பெற்றது.

ஆணையர் அவர்கள் முன்னுரையாகவும், முடிவுரையாகவும் சுமார் ஒருமணிநேரம் ஆகமத்தின் தத்துவம் பற்றியும் அதிலுள்ள புதைபொருள்களையும் அதை ஆலய நிர்வாகிகளும் அர்ச்சகர்களும் கடைபிடிக்கவேண்டிய விதிகளையும் வெகு விரிவாகவும் அழகாகவும் எடுத்து உரைத்தார்கள்.

நிர்வாக தர்மகர்த்தா நன்றிகூறி விழா இனிது முடிந்தது.

# திருஞானசம்பந்தர் அருளிய திருமுறை

[திருமிகு. சிவஞானத் தம்பிரான் சுவாமிகள்]

(முன் தொடர்ச்சி)

உயிர்கள் 'பாசம்' என்னும் கட்டுப்பட்டன. அக் கட்டு நீங்குதலே விடுதல் (வீடு) ஆகும். கட்டு விடுபட்டால், பெறுவது யாது? இவ் வினாவிற்கு விடை உண்டு. கட்டுப்படுவது துன்பம். கட்டினின்றும் விடுபடுவது 'துன்பநீக்கம்'. துன்பம் நீங்கிப் பெறுவது பேறு. அப் பேறு இன்பம். அதனால் அதை 'இன்பப் பேறு' என்பர். 'துன்பநீக்கம்' என்பதை வடமொழி அருள்நூல்கள் 'துக்க நிவர்த்தி' 'பாசவிமோசனம்', மோக்ஷம்' முத்தி முதலாகப் பலவாறு கூறுகின்றன. 'இன்பப் பேறு' என்பதைச் 'சுகப்ராப்தி' 'சிவப்பேறு' 'ஆன்மலாபம்' 'பரமசாயுச்சியம்' (பரமானந்த அவசம்) முதலாகப் பலவாறு கூறுகின்றன. 'பசுபாச விமோக்ஷாய' என்பது அதர்வ சிரஉப நிஷத்வசநம். 'பசுபாச விமோசகம்' என்பது பஸ்மஜாபாலோப நிஷத் வசநம். இக் கருத்தைத் திருஞானசம்பந்தர் அருளிய திருப்பாடலில்,

"விளையாததொர் பரிசில்வரு
பசுபாச வேதனையொண்
டளையாயின தவிரவ்வருள்
தலைவன்னது சார்வாம்
களையார்தரு கதிராயிரம்
உடையவ்வவ னேடு
முளைமாமதி தவழும்உயர்
முதுகுன்றடை வோமே"

என்று குறிப்பதிலும் பெற்றும். இதில் 'பசுபதி' என்றதன் விளக்கம் நன்கு அமைந்துளது. 'பசுபாச வேதனையாகிய ஒண்டளை தவிர அருள் பதி' என்றது 'பசுபதி' என்றதன் பொருள்விளக்கம் ஆகும். தலைவன் என்றது இங்குப் 'பதி' என்னும் பொருட்டு. பசு, பாசம், பதி என்னும் முப்பொருட்பேறும் ஓரிடத்திற் கிடைத்தது. விளையாத தோர்பரிசில் வரு பசு(த் துவம்.) விளையாததோர் பரிசில் வரு பாசவேதனை என்று கொண்டு, அநாதித்துவம் உணர்த்தும் உண்மையை உணர்தல் வேண்டும். திருவருளால் அன்றி மற்றெவற்றுலும் நீங்காது பாசத்தளை என்பதை 'ஒண்டளை' என்ற சொற்றொடரால் விளக்கியருளினர் நாம் காழிவேந்தர். அத் தளையைத் தவிர்ப்பவனே பரத்துவன் என்பார் 'தவிர அருள் தலைவன்' என்றருளினர். தளை 1. ஆணவம், 2. மாயை, 3. காமியம் என்று மூன்றுதலின், "தளையாயின" எனப் பன்மையிற் கூறிய துணர்க. பதி, பசு, பாசம் மூன்றும் அநாதியே ஆதலின், விளையாததோர்தன்மை மூன்றற்கும் உரித்தாகும்.

1. புல்லைத் தின்பனவும், 2. பகுத்துணர்வுக் குறைபாடுடையனவும், 3. பிறனுல் உழவு முதலிய வேலைகளில் ஏவப்படுவனவும், 4. துயரமுடையனவும், 5. ஏவுவோனுல் கட்டப்படுவனவும் ஆனவை பசுக்கள், அவ்வண்ணமே பாசக் கட்டுப்பட்ட பசுக்களாகிய ஜீவர்கள் ஆவார்கள். முற்றுணர்வுக்கும் ஈசன் என்னும் பெயர்க்கும் உரியன் பசுபதி ஆவன் என்று சாமவேத ஜாபால்யோப நிஷதம் கூறுகின்றது. இவ்வுண்மை நம் திருஞானசம்பந்தப்பெருமானுர் திருவாக்கில்,

"பண்ணுர் பாடல் ஆடல் அறாத
பசுபதி ஈசன்ஓர்பாகம்
பெண்ணு ணுய வார்சடை யண்ணல்
பேணு பெருந்துறையாரே"

என்று, விளங்குதல் காண்க.

'ய ஈசேஸ்ய த்விபத: சதுஷ்பத: | (எவர் இருகாலும் நாற்காலும் உடைய உயிர்களை ஆள்கின்றுரோ) என்று இருக்குவேதமும் (10. 121·3); 'அஹ மேவ பசூநாம் அதிபதி:' (நானே உயிர்களுக்குத் தலைவன்) என்று யஜுர் வேதமும் (6. 2. 3. 2); 'ஏஷாமீசே பசுபதி: பசூநாமஞ்சதுஷ் பதா முதசத்விபதாம்' (நாற்காலும் இருகாலும் உடைய உயிர்களைப் பசுபதி ஆள்கின்றுர்) என்று அவ்வேதமும் (3. 1. 4. 3); உமாபதயே பசுபதயே நமோநம: (உமாபதியார்க்கு; பசுபதியார்க்கு வணக்கம்)

என்று தைத்திரீய ஆரணியகமும் (10. 22. 40) குறிக்கின்றன. "ஸ்வதச்சிவ: பசுபதி:" "ஸ்வயம் பசுபதி" என அதர்வண பாசுபத ப்ரஹ்மோபநிஷத் கூறிற்று. இதனால், இயல்பான பசுபதியைப் பசுபதி யானவர் எனல் குற்றம். 'நல்லவர்' என்பதற்கும் 'நல்லவர் ஆனவர்' என்பதற்கும் உள்ள வேறுபாடு தெரியாதவர் கூற்று அது.

திருஞானசம்பந்தர் திருவாக்கில் வந்த திருமறைக்காட்டுத் திருப்பதிகத்தில்,

"கதிமலிகளி றதுபிளிறிட
உரிசெய்தஅதி குணன்உயர்பசு
பதியதன்மிசை வருபசுபதி
பலகலையவை முறைமுறைஉணர்
விதிஅறிதரு நெறிஅமர்முனி
கணனொடுமிகு தவமுயல்தரு
மதிசிபுணர்கள் வழிபடவளர்
மறைவனம்அமர் தருபரமனே"

என்றுள்ள திருப்பாடலில், 'பசுபதி மிசைவரு பசுபதி' என்றதன் நயம் உணர்க. 'உயர்பசுபதி' என்று தனிச்சிறப்பும் அவ்வுயர் பசுபதி மிசைவரு பசுபதி என்று தலைமைச் சிறப்பும் விளங்கிய வாறறிக. பசுக்களுக்கெல்லாம் பதி திருநந்திதேவர். அவர் மிசைவரும் பசுபதி திருமறைக்காடன் ஆகிய சிவபிரான். திருஞானசம்பந்தர் காலத்தில், திருமறைக் காட்டில் திருநந்திதேவர் ஆகிய ஊர்திமேல் எழுந்தருளி வருந் திருநாள் மிக்க சிறப்புடையது என உலகுபோற்றிய உண்மையை இத் தொடர் காட்டிற்று.

'இந்திரன்' என்றால் நாமைகதேசே நாமக்ரஹணமாகத், தேவேந்திரன் என்று பெயர் பெற்றது போல, பதிஎன்றால், 'பசுபதி' என்றே கொள்ளப்பெறும். 'பசூநாம் பதி பசுபதி' என்னும் வசநம் அதற்கு ஏது. 'பசுத்துவம் போகாத பசு' என்னும் வசநத்தால் அநாதியே பசுத்துவம் ஆகிய ஆணவ மலத்தின் தொடக்கால் ஜீவான்மாக்கள் எல்லாம் 'பசு' எனப்படும். ஆணவமலம் பிரதிபந்தம். எதனால்? ஆன்மாவின் முற்றுணர்வைத் தகைதலால். காமியம் அநுபந்தம், ஏன்? ப்ரவாஹாநாதியாக உயிரைப்பற்றிக் கொண்டு, புத்தியை முத்தியில் விருப்பம் தோன்றவிடாமல், உலகபோகத்தில் ப்ரவிர்த்திப்பிக்கும் தன்மையால் மாயை சம்பந்தம். என்னை? ஆன்மாவின் விபுத்துவத்தை மறைத்து ஏகதேசவிர்த்தியாகப் பண்ணுதலால். இவ்வாறு மும்மலமும் ஆன்மாவினொடு கொண்ட சம்யோகம் வேறுபடும்.

மும்மலசம்யோகம், ஆணவத்தைக் குறித்துப் பிரதிபந்தமும், கன்மத்தைக் குறித்து அநுபந்தமும், மாயையைக் குறித்துச் சம்பந்தமும் ஆதல் உயிர்க்கு உளது. சிவசம்பந்தமும் அவ் வந்நிலைக்குத் தக்கவாறு வெவ்வேறு ஆகித் தனித்தனி பெயர் பெறுகின்றது. அதனை இடம் நேர்ந்துழி விளக்குவேன். திருஞானசம்பந்தரைச் சிவசம்பந்தர் எனலாகாது. 'தாவில்தனிச்சிவ ஞானசம்பந்தராயினர்' என்றது திருத்தொண்டர்புராணம். பரமசாயுச்சியத்தைச் சிவசம்பந்தம் என்பது சம்பிரதாயமும், ஞானுவத்தைகளின் பேதமும், அப் பேதங்களுள் ஒன்றற்கொன்று உயர்வுடைமையும், அதன் அதன் உயர் நிலைக்கு ஏற்ற பெயர் உடைமையும் அறியாதார் கூற்றாகும். அவற்றை அறிதலும் பரமுத்தி சாதனம் பலவற்றுள் ஒன்றாகும்.

'பசுபதி' என்னும் பெயர்பெற்ற ஒருவர், சைவாசார சீலர் ஆக வாழ்வாரேல், அவர்பாலும் மிக்க பக்திகொண்டு ஒழுகுதல் சைவர்க்குக் கடனாகும். அதுகுறித்து, என்னைத் தன் அடியார் குழுவினருள் ஒருவனாகக் கொண்டு ஆண்டருளிய குருநாதர் சொல்லிய நிகழ்ச்சியாவது இது :—

அரதத்தாசாரியார்க்குத் தாயார் சிவநிவேதநத்தின் பொருட்டு ஒருசமயம் பசுபதி என்னும் அந்தணரிடம் சென்று பதக்கு நெல்லைப்பெற்றுக் காய வைத்திருந்தார். தெருவிலே சென்றுகொண்டிருந்த ஓர் எருது அதனைத் தின்னத் தொடங்கிற்று. அருகில் இருந்த அரதத்தாசாரியார் அவ்வெருத்தின் பக்கம் அணுகி, நெல்லைக் கூட்டிக் குவித்து, அவ்வெருது தின்னக் கொடுத்துக்கொண்டிருந்தார். கொடுத்தலாவது, ஈண்டுத் தின்னத் துணைபுரிதல் ஆகும். அதுகண்ட தாயார் சினம் உற்று, அதனைக் கோலால் அடித்து ஓட்டினார். ஆசாரியார் இந்நிகழ்ச்சிக்கு உள்ளம் நொந்திருக்கும் அளவில், 'பசுபதி' என்னும் அந்தணர் வந்தார். வந்து கேட்டு, என் பொருளில் சிவபெருமான் ஊர்தியின் வாயுறையாகப் பயன்பட்ட அளவு போக, மிச்சம் என் புண்ணியமாக நிவேதநப்

பொருளாகட்டும். இருதிறத்தும் என் நெல் செந்நெல் ஆயிற்று என்று சொல்லி இன்பம் எய்தினர். அப்பொழுதே, சிவலிங்கபூபதி யால் ஏவப்பட்ட ஆட்கள் வந்து ஆசாரிய ரைத் தொழுது, சுவாமீ, தங்கட்கு ராஜா நானூறு அரிசிமூட்டைகள் தந்தார். அவற் றுள் இருநூறு மூட்டைகளை வெள்ளம் அடித்துக்கொண்டுபோயிற்று. மிச்சம் இரு நூறு மூட்டைகளை இங்கே கொண்டுவந்து சேர்த்தோம். அவற்றை ஏற்று அருள்புரிய வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். ஆசாரியர் அதைக்கேட்டுத் தாயாரிடத்தில், அம்மா! நீர், பசுபதியின் பொருள் பசுக் களுக்கு உதவலாகாது என்று அவற்றுள் ஒன்முன பசுவை அடித்துத் துரத்தினீர். அத் தீவினையின் பயன் ஆற்றில் இருநூறு மூட்டை நெல் அடித்துக்கொண்டு போகலா யிற்று. அறிந்தீரோ என்ருர். உண்மை யுணர்ந்த தாயார் மிக வருந்தினர். பசுபதி யின் பொருள் பதக்குநெல்லே. அது சிவ புண்ணியத்திற்கு உதவியாவதால் வந்த பெருக்கம் எவ்வளவு? அளவிடலாமோ? 'பசுபதி' என்பவர் சிறப்பும், ஆசாரியர் அருட் செல்வச் சிறப்பும் இந்நிகழ்ச்சியால் விளங் கும் அன்ருே?

அப் பசுபதிக்கு எல்லாம் உறைவிடம் ஆயினும், பசுக்களே அவ்வுறைவிடங்களுட் சாலச் சிறப்புடையது. பசுக்கள் என்றதால் உண்டாகும் விளக்கம் ஆக்கள் என்னின் உண்டாகாது. பசு என்றது ஆவைமட்டும் உணர்த்துவது அன்று. பாசபந்தம் உடைய உயிர்களை யெல்லாம் உணர்த்தும் தகுதி உடையது. ஆவைப் பசு என்னும் வழக்கும் உயிர்களைப் பசு என்னும் வழக்கும் ஒன்ருகா. பசுபதி என்பது ஆக்களின் தலைமையுடையது என்று பொருள் பயவாது. உயிர்களின் தலைவன் என்ற பொருள் பயப் பது. அதனல், உயிர்கட்குத் தலைவன் உயிர் களில் ஒன்ருக விளங்குவான். உயிர்சித்து. அத் தலைவனும் சித்து, உயிர் அல்லாத பொருள்கள் எல்லாம் அசித்தே. சித்து அசித்தினிடத்திற் பிரகாசிப்பது சித்தினிடத் துள்ள பிரகாசத்தினும் குறைவுடையதே. அக் குறைவுடைய பிரகாசமும் சிவசித்தாகிய பதியைத் தன்பால் விளங்கப்பெற்ற ஜீவ சித்து ஒன்றற்கே தெரியும். அசித்துக்குத் தெரியாது. நிறைந்த பிரகாசம் ஜீவன்முக் தர்க்கே தெரியும். 'எல்லாம் சிவமயம்' 'எங்கும் சிவமயம்' என்னும் உண்மை சதசத்தும் சிதசத்தும் ஆகிய பசுக்களுக்குத் தெரியாது. ஜீவன்முக்தர்க்கே நன்கு தெரியும். முத் தான்மா பசு எனப்படான்.

தேஹமும் அஞ்ஞானமும் கண்டம். அவற்றை உடைய ஜீவன் அகண்டம் எனப் படாது. கண்டப் பொருளே. அத்தகைய உடலும் மலமும் ஒழியும்போது கண்டத் துவம் நீங்கும். அகண்டத்துவம் ஓங்கும். அவ்விரண்டு கண்டப் பொருளுக்கு உட்பட் டிருக்கும் அளவும் அந்த ஜீவன் ஆணவத் தால் மறைக்கப்பட்ட பசுவே யாகும். அவ் வுடலும் அஞ்ஞானமும் சிவஞானத்தால் நீங்குங் காலத்தில் ஆணவமல சக்தி கெடும். ஆன்மா சிவத்துவம் உறும்.

பாச சம்பந்தத்தால் ஆன்மா பசு. பாசம் நீங்கப்பெற்றது பசு அன்று. ஆன்மா; முத் தான்மா; அது பசு எனப்படாது. கலைக ளொடு கூடாதவனுய்ச் சுவாநுபவ ஞானக் கிரியைகளால் விளங்குபவன்; வியாபகன்; சின்மயன்; சூக்குமன்; சிவமே என்னத் தனக்கு மேலாக ஒரு தலைவன் இல்லாதவனுக இருக்கிருன்.

பசு எனும் ஜீவன் எப்பொழுது பொன் வண்ணனுயும் வினைமுதலாயும் புருடனுயும் தோற்றங்கள் எல்லாவற்றிற்கும் காரணனு யும் உள்ள இறைவனைக் காண்கின்ருனே அப் பொழுது ஜீவன்முக்தனுகிய அவன், புண் ணிய பாவங்களை நீங்கியவனுயும், களங்கம் இல்லாதவனுயும், சிவத்துவத்தை அடையும் நிலைமையனுயும் அமைவன். இது சிவசம வாதம் அன்று.

'விரிபுண் ணியபா வாதிகளை மேவு
ருது நிவர்த்திசெய்து
பிரிய மிகுந்த பரசிவஅ பேத
சொரூப மேயான
அரிய சாமி யத்தைஇனி தடைவான்'

என்று, மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், முண்டகோபநிஷத் வாக்கியக் கருத்தினை மொழிபெயர்த்துப் பாடினர்.

(தொடரும்)

# ❋ வடபழநி யாண்டவர் கோயில் ❋

பழநி என்பது முருகன் தலங்களுள் மிகவும் முதன்மை வாய்ந்தது. மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனுகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களைக் குறிக்கும் எனப்படும் முருகனின் ஆறுபடை வீடுகளுள், பழநி (திருவாவினன் குடி) மூன்றாவதாகத் திகழ்கின்றது. இத் தலம் மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்த தொன்று.

ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முற் பட்ட அகநானூறு என்னும் சங்ககால நூலில்,

"வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியலம் என்ற சொல்தாம்
மறந்தனர் கொல்லோ தோழி..."

எனவரும் பாடலில், பழநி என்பது 'பொதினி' என்று குறிப்பிடப் பெற்றுள் ளது. பழங்காலத்திற் சேர சோழ பாண்டியர் ஆகிய முடியுடைய மூவேந்தர்களின்கீழ்ப் பல சிற்றரசர்கள், தமிழகத்தின் பல பகுதிகளிலும் ஆண்டு வந்தனர். அவர்களை 'வேளிர்' எனக் கூறுவர். அவர்களுள் ஆவியர் குடியைச் சேர்ந்தவர்களுக்குப் 'பழநி' என இந்நாளில் வழங்கும் பொதினிமலை உரிமை யுடையதாக இருந்தது.



மிகப் பழங்காலத்திலேயே முருகன் வழிபாடு அங்குச் சிறப்பாக நிகழ்ந்து வந்த தாகல் வேண்டும். பொதினியையும் ஆவியையும் குறிக்கும் இப்பாடலில், முருகனைப்பற்றிய குறிப்பும் அமைந்திருத்தல் பெரிதும் கருதி மகிழற் பாலது.

ஆவியர் குடியில் தோன்றியவனே, வையாவிக் கோப் பெரும்பேகன் என்னும் மன்னன். அவனைக் குறித்துப் புறநானூறு என்னும் சங்கநூலில் பாடல்கள் பல பாடப் பெற்றுள்ளன. இப்பேகன் சங்ககால வள்ளல்களுள் ஒருவனாகத் திகழ்ந்தவன். இவ் வரசனே மழையில் நனைந்து குளிரால் நடுங்கிக்கொண்டிருந்த ஒரு மயிலைக்கண்டு மனம் பெரிதும் உருகி, அதற்குப் பொற்பட்டாடையைப் போர்த்தருளியவன். இம்மன்னவன் மயிலுக்குப் பொற்பட்டாடை போர்த்தியதற்குக் காரணம், தங்கள் குலதெய்வம் ஆகிய பொதினிமலை முருகனின் ஊர்தியாயிற்றே என்ற பக்தி யுணர்வும், பரிவுமே யாதல் வேண்டும்.

இங்ஙனம் பேகன் என்னும் பெரு வள்ளல் மயிலுக்குப் போர்வை அளித்த செய்தியினை,

"மடத்தகை மாமயில் பனிக்கும் என்றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேகன்."

(புறம் - 141)

"உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்."

(புறம் - 145)

"கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்."

(சிறுபாண் - 85. 87)

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும்."

(புறப்பொருள் மாலை)

எனப் பழந்தமிழ் நூல்கள் பாராட்டி யிருக்கின்றன.


மயில் மண்டபத்தின்மேல் முருகன்

இத்தகைய பக்தியுணர்விற் சிறந்த பேகன் என்னும் பெருவள்ளல் தோன்றிய ஆவியர்குடிக்கு உரிமையுடையதாக விளங்கியிருந்த பொதினிமலையைச் சார்ந்த பகுதிக்கு "ஆவிநன்குடி" எனப் பெயர் வழங்குவதாயிற்று. இதுபோது அது மலையடிவாரத்திற்கு அணித்தேயுள்ள அழகிய கோயிலுக்கு வழங்கி வருகின்றது. ஆசிரியர் நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப் படை, ஆவிநன்குடியில் முனிவர்களும் தேவர்களும் பிறருமெல்லாம் வழிபட்டுள்ள முருகன் எழுந்தருளி விளங்கும் திறனைப் புகழ்ந்து பாடிப் பரவுகின்றது. திருவாவினன்குடியில் திருமகள் காமதேனு, சூரியன், நிலமகள், அக்கினி தேவன் ஆகியோர் வழிபட்டுப் பேறு பெற்றமையினைத் தலபுராணம் கூறுகின்றது. (திரு + ஆ + இனன் + கு + டி). திரு - மகாலட்சுமி. ஆ - காமதேனு. இனன் - சூரியன். கு - உலகம், நிலமகள். டி - அக்கினி தேவன் என்று அதன்படி விளக்கம் கூறுவர் பெரியோர்.

"ஆத ரம்பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனளினில்
ஆதி யந்த உலா ஆசு பாடிய
சேரர் கொங்கு வைகாவூர் நனடதில்
ஆவி நன்குடி வாழ்வான தேவர்கள்
பெருமாளே."

எனவரும் அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாடலும் ஈண்டுச் சிந்தித்தற் குரியது. இதனால் சேர வேந்தர்களுக்குரிய கொங்கு மண்டலத்தில் வைகாவூர் நாட்டின் பிரிவுக்குள் ஆவிநன்குடி விளங்கியிருந்தமை புலனாகின்றது. 'வையாவியூர்' என்பதே 'வைகாவூர்' என இதன்கண் மருவி வந்துள்ளது. அங்ஙனமே 'வையாவிபுரி' என்பதே இந்நாளில் 'வையாபுரி' என வழங்கப்படுகின்றது. தமிழ்நாட்டின் பழைய வரலாற்றுச் செய்திகளை, இவ் வழக்காறுகள் இன்றும் நமக்கு அறிவித்துக் கொண்டு இருக்கின்றன.

'பழநி' என்பது ஒரு சிறந்த பெயர். முருகனின் ஆறு படை வீடுகளுள், இஃதொன்றே மக்களின் பெயராக வைத்துப் பெரிதும் வழங்கப்படுகிறது. "படிக்கின்றிலை பழநித் திருநாமம்! படிப்பவர்தாள் முடிக்கின்றிலை" என அருணகிரிநாதர் பெருமான் அருளிய கந்தர் அலங்காரம் இப் பெயரினை வியந்து போற்றுகின்றது. "அதிசயம் அனேகம் உற்ற பழநி" என அவர் அருளிச் செய்திருப்பது, இத் தலத்தின் பெருமைகளை விளக்கும். இதற்குச் "சித்தன் வாழ்வு" என்றும் ஒரு பெயர் உண்டு. முருகன் ஆகிய எல்லாம் வல்ல சித்தனும், போகர் புலிப்பாணி முதலிய எண்ணிறந்த பல சித்தர்களும் வாழ்ந்து வருதல் குறித்து, அப் பெயர் இதற்கு அமைந்திருத்தல் கூடும்.

ஒரு சமயம் நாரதர் சிவபெருமான்பாற் கொணர்ந்து கொடுத்த மாங்கனியின் பொருட்டு முருகப் பெருமான் மயில்மீது ஏறி


மாங்கனிக்கு உலகை வலம்வரல்

உலகை வலம் வந்ததும், விநாயகப் பெருமான் சிவபெருமானையும் உமாதேவியையும் வலம் வந்து அதனைப் பெற்றுக்கொண்டதும், அதனால் முருகன் முனிவுகொண்டு பொதினி மலைக்குப் போந்து தங்கிவிட, இறைவன் எழுந்தருளி வந்து 'மிகச் சிறந்த ஞானப் பழம் நீ யன்றோ? இனிமையே வடிவாக அமைந்த நினக்கு, இன்னுத வேறொரு பழமும் வேண்டுவதோ?' எனக்கூறி முருகனை மகிழ் வித்ததும், அதனால் பழநி எனப் பெயர் ஏற் பட்டதும் யாவரும் அறிவர்.

"ஈசன் உருகி மடியினில்வைத்து
என்றும் இளையோய்! அறிவுடையை!
தேசு தரும்நம் வாள்நுதற்கண்
மணிநீ! சிறுவ னோ? பெரியை!
வாச நறுமென் கனியும் ஒரு
கனியோ? மதுர மொழிவாயாற்
பேச அரிய மறைஞானப்
பிள்ளை, பழம்நீ எனப்புகன்றார்"

எனவரும் பழநித் தலபுராணப் பாடல் இவ் வரலாற்றைச் செவ்விதின் விளக்கும்.

"கனியைத் தரவிலை எனஅருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனில்உறைகந்தப்
பெருமாளே"

என்னும் அருணகிரிநாதர் திருமொழியும் இதனைக் குறிப்பிட்டுப் போற்றி யிருத்தல் காணலாம்.

'ஞானப் பழம் நீ' எனச் சிவபிரான் புகழ்ந்து போற்றிய முருகப் பெருமான் கண் கண்ட கலியுகக் கடவுளாக, வேண்டுவார் வேண்டுவன எல்லாம் தரும் வள்ளலாக விளங்கி வருதலை அன்பர்கள் அனைவரும்



சரவணப் பொய்கை



ஆறுமுகர் உற்சவர்

அறிவர். அப்பெருமான் தன்னை அடியார்கள் எங்கிருந்து நினைந்தாலும், அங்கே எழுந் தருளி வந்து காட்சி தந்து, பேரருள் புரிபவ ராகத் திகழ்கின்றார்.

"எங்கே இருந்துன் அடியேன் உனைநினைந்தால்
அங்கேவந் தென்னோடும் உடனாகி நின்றருளி
இங்கேஎன் வினையை அறுத்திட் டெனையாளும்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே"

என்பது சுந்தரர் தேவாரம். நாம் எங்கே இருந்து நினைந்தாலும் இறைவன் நமக்கு அங்கே வந்து அருள்புரிகின்றான் என் பதனைச் சுந்தரர் பெருமானும் வலியுறுத்தி யிருத்தல் அறிதற் குரியது.

அம் முறையில் பழநியில் இருந்து தொன்றுதொட்டு அடியார்களுக்கு அருள் புரிந்து வந்த தண்டாயுதபாணிப் பெருமான், சென்னைக் கோடம்பாக்கத்திலும் அண்மைக் காலமுதல் எழுந்தருளிப் போந்து திருக் கோயில்கொண்டு வீற்றிருந்து அருள்புரிந்து வருகின்றார். கோடம்பாக்கம் என்று இந் நாளில் வழங்குவது பழங்காலத்தில் 'கோடலம் பாக்கம்' எனப் பெயர் பெற்றிருந்தது. இலக் கியங்களில் 'கோடலம் பாகை' எனவும், 'கோடல்' எனவும் இது குறிப்பிடப் பெற் றுள்ளது.



மயில் மண்டபத்திற்கு முன்புள்ள
வடபழநி ஆண்டவர் வரலாற்றுச் சிற்பங்கள்

'ஞானமிர்தம்' என்னும் சைவசித்தாந்த நற்பெரு நூலை இயற்றிய வாகீசமுனிவர் இங்கு வாழ்ந்து வந்தார். இவர் கி. பி. 1145 முதல் கி. பி. 1205 வரை வாழ்ந்தவராதல் கூடும் என அறிஞர்கள் கருதுகின்றனர். எனவே கி. பி. 1232-ஆம் ஆண்டிற்குச் சிறிது முன்பின்னாக வாழ்ந்த மெய்கண்டார் இவருக்குப் பிற்பட்டவராதல் வேண்டும். எனவே இவர், சிவஞான போதம் இயற்றிய மெய்கண்டார்க்கும் முற்பட்ட சைவசித்தாந்த நூலாசிரியராதலை யுணரலாம்.

இக் கோடலம்பாக்கத்திற்குப் 'புலியூர்' எனவும் வேறொரு பெயர் வழங்கியது. அதற்குச் சான்று பகரும் நிலையில், இப்போதும் இங்கு "வியாக்கிர புரீசர்" கோயில் என ஒன்றுளது. (வியாக்கிரம் - புலி). இப் புலியூரைத் தலைநகராகக் கொண்டதே, தொண்டை மண்டலத்தின் 24 கோட்டங்களுள் ஒன்றான 'புலியூர்க்கோட்டம்' ஆகும். பெரியபுராணம் இயற்றிய சேக்கிழார் சுவாமிகள் தோன்றிய குன்றத்தூர் வளநாடு, இப் புலியூர்க்கோட்டத்தைச் சேர்ந்த ஓர் உட்பிரிவே யாகும் என்பதும், ஈண்டு நாம் உணர்ந்துகொள்ளத் தக்கது.

இத்தகைய பழமைச் சிறப்புடன் புதுமைப் பொலிவும் பூத்துத் திகழும் சென்னைக் கோடம்பாக்கத்திற்கு மேலும் பெருமையை விளைப்பது, அங்குச் சிறப்புற அமைந்துள்ள பழநியாண்டவர் கோயில்! இதன்கண்,

"வைவாய்க் கணிச்சிப் படை என்ன
வதிவித் திடும்கோ வணத்தண்டு
கைவாய் வலத்தின் அமைத்தருளிக்
கடியில் இடக்கை பதித்தருளி
ஐவாய் வழங்கும் பொறிபுலனை
அவித்த வுறுவர் இமையோர்கள்
உய்வான் இறைஞ்ச அருள்வழங்கும்
கந்தன்..."

எனக் கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்துட் குறிப்பிடும் தண்டாயுதபாணியாகிய பழநியாண்டவர் மிகவும் அருளாற்றலோடு விளங்கி வருகின்றார்.

இக்கோயில் இங்கு நன்கினிது அமையக் காரணராக இருந்த பெரியோர்களுள், ஸ்ரீமத் அண்ணாசாமி நாய்க்கர், ஸ்ரீலஸ்ரீ இரத்தினவேல் செட்டியார், குகஸ்ரீ பாக்கியலிங்கத் தம்பிரான் என்னும் முப்பெரும் பக்தர்களும் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். இவர்களுக்குப் பின்னர் எத்தனையோ பல செல்வர்களாலும் நல்லோர்களாலும் இக்கோயில் பெரிதும் வளர்ச்சியுற்றுச் சிறப்படைந்துள்ளது. தென் திருமுல்லைவாயிலை நோக்கி வடதிருமுல்லை வாயில் எனவும், தென்குரங்காடுதுறையை நோக்கி வடகுரங்காடுதுறை எனவும் தலங்கள் அமைந்துள்ளமை போல, இதுவும் தெற்கேயுள்ள பழநியை நோக்கி வடபழநி எனப் பக்தகோடிகளாற் பெரிதும் பரிந்தழைக்கப்பட்டு வருகின்றது. நாள்நாளும் பெருந்திரளான அன்பர்கள் வடபழநி யாண்டவரை வணங்கி வேண்டும் நலங்களை யெல்லாம் பெற்று வருகின்றனர்.

வாரத்தில் செவ்வாய், வெள்ளி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களிலும் இங்குப் பழநி




முன் மண்டபத்தில் ஆறுமுகர் சித்திரம்

யாண்டவருக்கு இடைவிடாது அன்பர்களால் அபிஷேகம் செய்யப்பட்டு வருகின்றது.

மற்றும் மாதந்தோறும் கிருத்திகை, சஷ்டி, விசாகம் முதலிய விசேட நாட்களில் சிறப்பான முறையில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. ஆண்டு தோறும் பங்குனி உத்திரத்தை முன்னிட்டுப் பத்து நாட்கள் பெருஞ் சிறப்பாக லட்சார்ச்சனை நடத்தப் பெறுகின்றது.

மேலும் ஒவ்வொரு ஆண்டும், கந்தர் சஷ்டி விழாவை முன்னிட்டு ஆறுநாட்களிலும் லட்சார்ச்சனை வழிபாடு மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

வடபழநியாண்டவர் கோயிலும், அவர்தம் திருவருளும் தழைத்தோங்கி மன்னுயிர்க்கெல்லாம் நலங்கள் பலவும் பெருக, அப்பெருமானின் திருவடிகளை மனமொழி மெய்களால் வழுத்துவோமாக!

## நவராத்திரி விழா.

கீழ்க்காணும் கோயில்களில் நவராத்திரி விழா சிறப்பாக நடைபெற்றது.

| | |
|---|---|
| சென்னை | ... சென்னமல்லீசுவரர், சென்னகேசவப்பெருமாள் கோயில். |
| தஞ்சாவூர் | ... பங்காரு காமாட்சியம்மன் கோயில் |
| சென்னை | ... அருணாசலேசுவரர் கோயில் |
| சென்னை | ... ஏகாம்பரேசுவரர் கோயில் |
| சென்னை | ... பாதாள பொன்னியம்மன் கோயில் |
| அம்பாசமுத்திரம் | ... காசிபநாதசுவாமி கோயில் |
| மதுரை | ... கூடலழகர் சந்நிதி ஸ்ரீமதுரவல்லித்தாயார் கோயில் |
| மதுரை | ... வீரராகவப்பெருமாள், இரங்கநாதசுவாமி கோயில் |
| திருவெண்காடு | ... சுவேதாரண்யேசுவரசுவாமி கோயில் |
| சுந்தரப்பெருமாள்கோயில் | ... சௌந்திரராஜப்பெருமாள் கோயில் |
| சின்னமனூர் | ... பூலானந்தீசுவரர் கோயில் |
| வேலூர் | ... வேம்புலியம்மன் கோயில் |
| சென்னை | ... கபாலீச்சுரம், கற்பகாம்பாள் கோயில் |
| மதுரை | ... மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் |
| சிவகாசி | ... விசுவநாதசுவாமி கோயில் |
| சேலம் | ... சுகவனேசுவரசுவாமி கோயில் |
| பரதராமி | ... காசிவிசுவநாதர்;பிரசன்னவெங்கடேசப்பெருமாள்கோயில் |
| சோழவந்தான் | ... ஜனக நாராயணப்பெருமாள் கோயில் |
| பேட்டைவாய்த்தலை | ... மத்தியார்ஜுனேசுவரசுவாமி கோயில் |
| விருதுநகர் | ... சொக்கநாதசுவாமி கோயில் |
| மரக்காணம் | ... பூமீசுவரர் ஸ்ரீ கிரிஜாம்பாள் கோயில் |
| சேலம் | ... திரௌபதியம்மன் கோயில் |
| அந்தணப்பேட்டை | ... அண்ணாமலைநாதசுவாமி கோயில் |
| காஞ்சிபுரம் | ... ஏகாம்பரநாதர் கோயில் |
| கிருஷ்ணராயபுரம் | ... திருக்கண்மல்லீசுவரசுவாமி கோயில் |
| குற்றாலம் | ... தாட்ராய மந்திரம் |
| ஓமாம்புலியூர் | ... பிரணவபுரீசுவரர் கோயில் |

## ஆணையர் கலந்துகொண்ட நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 14—10—62 | மன்னார்குடி, ராஜகோபால சுவாமிகோயில் | பாஞ்சராத்திர ஆகமபயிற்சி நிறைவு விழா. |
| 19—10—62 | சென்னை மைலாப்பூர், கபாலீசுவரர் கோயில் | திருவெம்பாவை, திருப்பாவை ஆங்கில மொழிபெயர்ப்பு நூல் வெளியீட்டு விழா. |
| 28—10—62 | சென்னைத் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம் | மெய்கண்டார் விழா. |

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

[திரு. K. பட்சிராஜன். B.A., B.L., திருநெல்வேலி]

அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த இளையாழ்வார் வழக்கம்போல் வைகறையில் கண் விழித்தார். இன்னும் விடிவோரை ஆகவில்லையோ என்று ஒரு ஐயம். ஆனால் எழுந்த மறுகணமே ஐயம் தெளிந்துபோயிற்று. தூரத்தில் எங்கிருந்தோ இனிய குயிலோசை காற்றில் மிதந்து வந்தது. அண்மையில் உள்ள மரம் ஒன்றில் ஆனைச்சாத்தன் பறவை இணையொன்று தம் கலவியிலே மகிழ்ந்து தமக்குள் உரையாடின. மந்தமாருதம் அவருடைய திருமேனியை மெல்ல வருடிற்று. இளையாழ்வாரும் தம் சயனத்திலிருந்து "வரதா" என்ற நாமோச்சாரணத்துடனும் தென்திசை நோக்கிக் கூப்பிய கையுடனும் எழுந்தார். எங்கும் கன இருள் நிறைந்திருந்தது. கீழ்வானம் இன்னும் ஒளி கீறவில்லை. தம்மை இங்கே வழி நடத்திவந்த இளம் வேடுவத் தம்பதிகளும், எழுந்து விட்டார்களா என்று அறிய அவர்கள் சயனித்திருந்த இடத்தே திரும்பினர். அவர்கள் இருவரும் தங்களுக்குள்ளே அந்தரங்கமாக ஏதோ பேசிக்கொண்டிருந்த ஒலி இலேசாகக் கேட்டது. "ஐயா! வேடுவரே" என்று மெதுவாகக் குரல் கொடுத்தார். வேடுவனும் "சுவாமி! எழுந்துவிட்டீர்களா? நன்றாக உறங்கினீர்களா? நேற்று வழிநடந்த களைப்பெல்லாம் மாறிவிட்டதா? என்று கேட்டுக்கொண்டே இளையாழ்வார் இருந்த திசை நோக்கி வந்தான். அவனைத் தொடர்ந்து அவ்வேட்டுவ நங்கையும் வந்தாள். அவளைக் கண்டதுமே இளையாழ்வாருக்கு முன்னாள் இரவு அவள் நீர்வேட்கையுற்று வினவியதும் அதன்காரணமாகத் தமக்கு ஏற்பட்ட மனக்கலக்கமும் பளிச்சென்று நினைவிற்கு வந்தன. உடனே அவர் வேடுவனை நோக்கி நேற்றிரவே உம்முடைய பத்தினி தாகத்திற்கு நீர் கேட்டபோது "அருகிலே கிணறு இருக்கிறது" என்று சொன்னீரே. "இப்போதாவது அவள் தாகத்தைத் தணித்தீரா" என்று வினவினர். வேடுவனும் "இன்னும் தீர்க்கவில்லை. ஆனால் கிணறு எங்கே இருக்கிறது என்பதை அவள் விழிக்கும் முன்பே கண்டு பிடித்து விட்டேன். தெற்கே சற்றுத் தொலைவில்தான் இருக்கிறது. அதை அவளிடம் சொல்லிக்கொண்டிருக்கும்போதுதான் தாங்களும் குரல் கொடுத்தீர்கள். வாருங்கள் கிணற்றுக்குச் செல்லலாம். தாங்களும் தங்கள் காலைக் கடன்களை முடிக்கவேண்டாமா!" என்று கூறியவனுய்த் தெற்குநோக்கி நடந்தான். அந்நங்கையும் இளையாழ்வாரும் பின் தொடர்ந்தனர். "இந்த இருட்டிலே எப்படி வழி கண்டு நடக்கிறான்" என்று இளையாழ்வார் தமக்குள் வியந்தார். அவர் எண்ணியதை உணர்ந்தவன்போல வேடுவன் "சுவாமி எப்படி இருட்டில் வழிபார்த்து நடக்கிறேன் என்று நினைக்கிறீர்களா? என் கண்களுக்கு இரவு பகல் என்பது கிடையாது? அவைகளுக்கு இலக்காகாதவையும் கிடையாது. இருட்டைப்பற்றி அஞ்சவேண்டாம். என்னைப் பின்பற்றி வாருங்கள் என்று கூறிக்கொண்டே சென்றான். சிறிது தூரம் சென்றதும் "இதோ கிணறு வந்துவிட்டது! என்று வேடுவன் கூறினான். அவனுக்குப் பின் சற்றுத் தொலைவிலே வந்த இளையாழ்வாரும் கிணற்றை அணுகினர். இதற்குள் கீழ்வானம் வெள்ளென்ற ஒன்றிரண்டு ஒளிக்கீற்றுடன் விளங்கிற்று. வேடுவன் இளையாழ்வாரைப் பார்த்து "சுவாமி கிணற்றில் அருகிலேயே தண்ணீர் இருக்கிறது. இரண்டு மூன்று படிகள் இறங்கினால் போதும். படிகள் சிறிது வழுக்கிவிடாமல் இறங்கி முதலில் உங்கள் கை, கால், முகம் கழுவிக்கொள்ளுங்கள்" என்றான். இளையாழ்வாரும்மெல்லப்படிகளைத் தடவிப்பார்த்து இறங்கித் தன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டார். அவர் படியேறு முன்னே அவ்வேட்டுவ நங்கை "சுவாமி, நான் எவ்வாறு இக்கிணற்றில் இறங்க இயலும். தங்கள் கையாலேயே இரண்டு மூன்று கை தண்ணீர் எடுத்து ஊற்றிவிடுங்கள் என்று தன் இரு கைகளையும் நீட்டினாள். இளையாழ்வாரும் வரதன் அருளால் தனது எண்ணம் ஈடேறுவதை எண்ணிப் பூரித்துத் தம்இருகை

களாலும் நீரைமொண்டு அவள் கையில் வார்த்தார். ஒரு கை வாங்கிப் பருகியவள் "தண்ணீர் மிகவும் நன்றாய் இருக்கிறதே!" என்று வியக்க, அருகிலிருந்த வேடுவன் "சுவாமி அன்போடு அளிக்கும்போது நன்றாக இராதா என்ன! வேண்டுமளவும் வாங்கிக்குடி என்றான். மூன்று முறை இளையாழ்வார் கிணற்றில் குனிந்து நீர்மொண்டு அவ்வேட்டுவ நங்கைக்கு நீர் ஊற்றினார். நான்காம் முறை அவர் குனிந்து நிமிர்ந்தபோது அவ்வேட்டுவ தம்பதிகளைக் காணவில்லை. பரபரப்போடு கரையேறினார். சுற்றுமுற்றும் பார்த்தார். "வேடுவரே, வேடுவரே" என்று கூவினார். பதில் இல்லை. சுற்றி அலைந்தார். அத்தம்பதிகள் தென்படவில்லை. "என்ன ஆச்சரியம்! எங்கு எப்படிப் போய்விட்டார்கள்!" என்று வியந்தவராய்த் தம் கால்போன வழியே நடந்தார். இதற்குள் கங்குல் வெளி வாங்கிப் பொழுது புலர்ந்துவிட்டது. சற்றுத் தூரத்தே நாலைந்து பேர் நடமாட்டம் காணப்பட்டது. இளையாழ்வார் உள்ளத்தே இருந்த சோர்வு ஓரளவு நீங்கிச் சிறிது தெம்பு ஏற்படவே அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். சற்றுத் தொலைவிலே தோப்புகளும், வீடுகளும் தென்பட்டன. அவற்றுக்கெல்லாம் மேலாக ஒரு விமானம் தென்பட்டது". அடடா! நாம் ஒரு ஊரருகே வந்துவிட்டோம் போலிருக்கிறதே! நேற்று இரவு இன்னும் சற்று நடந்திருந்தால் இப்படி நிர்மானுஷ்யமான இடத்தில் தங்கி இடர்ப்பட்டிருக்க வேண்டாமே. ஒருவேளை நம்முடன் வந்தவர்களுக்கு இவ்வூர்தான் போலிருக்கிறது. நம்மைத்தான் ஒரு ஊர் வரைக்கொண்டு சேர்த்தாகிவிட்டதே என்ற எண்ணத்துடன் விட்டுச் சென்றனரோ என்னவோ" என்ற எண்ணமிட்டுக் கொண்டே தாம் பார்த்த ஆட்களை அணுகி "ஐயா, இது எந்த ஸ்தலம்?" என்று வினவினார். அவர்கள் இவரை வியப்போடு திரும்பி நோக்கினர். ஒருவர் "என்ன சுவாமி, பரம வைதிகராகக் காணப்படுகிறீர்? புண்ணிய கோடி விமானம் வானளாவ நிற்பது கண்டுமா இது எந்த ஸ்தலம்? என்று கேட்கிறீர்? கஞ்சி வரதர் விமானம் காதத்தில் வருபவருக்கும் தன்னைக் காட்டிக்கொடுக்குமே" என்று கூறினார். இளையாழ்வாருக்குத் தம் காதுகளை நம்ப முடியவில்லை. மீண்டும் நோக்கினார் "ஆம் அத்தியூரான் விமானமே! "அப்படியானால் அதோ தெரிகிறதே அந்தக் கிணறு?" என்று கேட்டார். இவரை வினவியவர் "சந்தேகமில்லை சுவாமி! அதுதான் சாலைக்கிணறு என்று பதில் இறுத்தார். கேட்ட இளையாழ்வார் உள்ளத்திலே முன்னிகழ்ந்த சம்பவங்கள் அடுக்கடுக்காக மின்னல் வேகத்திலே தோன்றி மறைந்தன. "அப்படியானால் அவ்வேட்டுவ தம்பதிகள்?......ஆம்! அவர்கள் என்னப்பன் வரதனும், பெருந்தேவித்தாயாருமே தான்! ஆஹா! அவர்களுடைய எளிமைதான் என்னே! என்று அத்தம்பதிகளின் ஸௌலப்ய, ஸௌசீல்யங்களிலே மூழ்கினார். விமானத்தை நோக்கித் தண்டனிட்டார். அப்படியே தன்னை மறந்து கிடந்தார்.

அவர் மீண்டும் கண் விழித்தபோது சூரியோதயமாகிவிட்டது. மெல்ல எழுந்தார். மீண்டும் விமானத்தை நோக்கித் தொழுதகையராய் "என்னப்பனே உன் தயைதான் என்னே! இவ்வளவு தூரம் உன் பரிபூரண கிருபைக்கு இலக்காம்படி யான் என்ன தகுதியை உடையேன். யாருமில்லாக் கானகத்தே சதிக்கூட்டத்தைத் தப்பி அலைந்த அடியேன்பால் உனக்குத்தான் என்ன பரிவு! வேடனாக வந்தாயே அப்பா! வேறு வேடமில்லையென்றா? ஒருவேளை அதிலும் என்னைச் சோதித்தாயோ! அம்மையே! தங்கள் திருமுகத்தை நோக்கியபோதே அடியேன் உள்ளம் உணர்ந்து இது வேட்டுவ நங்கையாக இருக்க முடியாது என்று கூறிற்று. அம்மா! உன் குழந்தையை வழி நடத்த நீயும் அவருடன் வந்தனையே! உங்கள் கருணையை அடியேன் என்னென்று வியப்பது? உங்கள் இருவரையும் சாதாரண வேடுவர்களாக அல்லவா இப்பாவி மதித்துவிட்டேன். என்ன அபசாரம்! உள்ளம் ஐயம் எழுப்பியும் உடலின் ஓய்வு ஆராயவிடாமல் தடுத்துவிட்டதே! ஐயோ! இப்பாவிக்காகத் திவ்ய தம்பதிகளாகிய நீங்கள் எவ்வளவுதூரம் கல்லிலும், முள்ளிலும் உங்கள் பூவின் மெல்லிய பாதங்கள் நோவக் கானகத்தே அடியேனுக்குவழிகாட்டி நடத்தினீர்கள். அடவியில் திகைத்த அடியேனுக்கு முன் நடந்து வழிகாட்டிய நீங்களே அடியேனுடைய வாழ்க்கைக் காட்டிலும் வழிகாட்டி; அடியேனை உய்விக்கவேண்டும்" என்று மீண்டும் விமானத்தைத் தண்டனிட்டு எழுந்தார். அவர் களைப்பெல்லாம் பறந்துவிட்டது. தன்னியற்கையாக எங்கோ

சென்று திரும்புவார் போன்று காஞ்சியில் தன் மனைபோய்ச் சேர்ந்தார். இல்லாள் வியப்போடு அவரை வரவேற்றுக் காசியாத்திரை அதற்குள் பூர்த்தியாகிவிட்டதா என்று வினவினாள். இளையாழ்வார் ஏதோ மனத்தில் பட்ட சமாதானம் கூறிச் சமாளித்துக் கொண்டார்.

பின்னர் இளையாழ்வார் நீராடிப் பண்டார மணிந்து, அத்தியூரான் கோயிலை அடைந்து அவனடி வணங்கி, முன்னைய நிகழ்ச்சிகளை மீண்டும் நினைந்து அவன் கிருபைக்கு நன்றி செலுத்தினார். பெருந்தேவித் தாயாரை வணங்கி யெழும்போது அன்று வைகறையில் கிணற்றருகே தாயார் உரைத்த வாசகமும் எம்பெருமான் உரைத்த மொழியும் அவர் உள்ளத்தே பளிச்சிட்டன. அவ்வாசகங்கள் அத்திவ்விய தம்பதிகளின் உள்ளக்கிடக்கையாகவும் அதைப் பூர்த்திசெய்யத் தமக்கிட்ட நியமனமாகவும் அவர் உள்ளத்தே பட்டது. அந்நியமனத்தை ஏற்று நாள்தோறும் அத்தியூரானுக்கும், பெருந்தேவித் தாயாருக்கும் அவர்கள் திருவுள்ளம் உகந்த சாலைக்கிணற்றிலிருந்து அவர்களது திருமஞ்சனம், திருவாராதனம் இவைகளுக்கு வேண்டும் தீர்த்தம் கொண்டு சமர்ப்பிக்கும் கைங்கரியத்தைச் சங்கல்பித்து, அதன்படியே அக்கைங்கரியத்தை தினமும் குறைவறச் செய்து வந்தார்.

இப்பால் இளையாழ்வாரை விந்தியக் காட்டிலே பிரிந்த யாதவப் பிரகாசரது கோஷ்டி தமது யாத்திரையைத் தொடர்ந்து கங்கா தீரத்தை அடைந்தது. அங்கே கங்கை ஆற்றிலே மாகஸ்நானம் பண்ணிக்கொண்டு பல நாள் அந்தக் கோஷ்டி தங்கியது. அவர்களுள் கோவிந்தபட்டர் கங்கையில் ஒருநாள் அகமர்ஷண ஸ்நானம் செய்யும்போது தற்செயலாக அவருடைய உள்ளங்கையிலே ஒரு இலிங்கம் வந்து சேர்ந்தது. ஓடுகின்ற ஜலத்திலே தம் கையிலே இலிங்கம் சிக்கியதைக் கண்ட கோவிந்தர் ஆச்சரியம் மிக்கவராய் அந்த இலிங்கத்தோடு சென்று யாதவப் பிரகாசரை வணங்கிக் காட்டி நிகழ்ந்ததைக்கூற யாதவப் பிரகாசரும் மிக வியந்து "நாம் யாவரும் கங்கா ஸ்நானத்திற்கு வந்திருக்க அந்த ஸ்நான பலன் உமக்குமட்டும் கைகூடியது. நீர் உண்மையிலே தெய்வ அமிசமுடையவர். அதனால்தான் கங்கையில் மூழ்கிய உம்முடைய கையில் கங்காதரனே வந்து அமர்ந்து கொண்டான் அவனைப் பூஜியும். உமது உள்ளங்கையிலே இலிங்கம் அமர்ந்தமையின் இனி உம்மை உள்ளங்கை கொணர்ந்த நயினார் (உள்ளங்கை குளிர்ந்த நயினார் என்றும் சில வரலாறுகள் கூறுகின்றன) என்று அழைப்போம்" என்று கூறி மற்றைய சீடரைக் காட்டிலும் அவரிடத்தே தனித்த மதிப்பும், அன்பும் உடையவரானார். பின்னர் சிலநாள் கழிந்தவாறே தங்கள் ஸ்நானங்களை முடித்துக்கொண்டு யாதவப் பிரகாசரும் அவர் சீடர்களும் ஜகந்நாதம், அஹோபிலம் வழியாகத் திரும்பி வந்தனர். அஹோபிலம் கடந்தபின் காஞ்சியை நோக்கி வழி நடந்த யாதவப் பிரகாசரிடம் கோவிந்தபட்டர் "இந்த இலிங்கப் பெருமானைத் தக்க இடத்தே பிரதிட்டை செய்துவிட்டுவருகிறேன்" என்று கூறிக் குருவிடம் விடைபெற்று அவர்களைப் பிரிந்தார். பிரிந்தவர் தான் பிறந்த இடமாகிய மழலைமங்கலம் (இதனை நிரந்தர வகரம் என்று சில வரலாறு கூறும்) என்ற ஊரைச் சேர்ந்து, அங்கே உள்ள அறிஞர்களையெல்லாம் கூட்டித் தம் கையில் இலிங்கம் சேர்ந்த வரலாற்றைக் கூறி, அவ்வூரிலேயே ஒரு கோயிலமைத்து அதில் இலிங்கத்தைப் பிரதிட்டை செய்து, அப்பெருமானின் வழிபாட்டிலே காலத்தைக் கழிக்கலானார். இப்படி சிலகாலம் செல்ல ஒருநாள் அயர்ந்து உறங்கும் அவர் கனவிலே காளத்திநாதன் தோன்றி "உமது ஆராதனையை மெச்சினோம். நீர் இனி இங்கிருந்து நமது காளத்திக்கே வந்து நமது கோயில் கைங்கர்யத்தை நிர்வகித்து வாரும்" என்று கூறி மறைந்தார். அற்றை இரவிலேயே காளத்திநாதன் தம் கோயில் தானத்தார் கனவிலும் தோன்றி "மழலை மங்கலத்திலே உள்ளங்கை கொணர்ந்த நயினார் என்று பெயருடைய ஒருவர் இருக்கிறார். அவரை அழைத்து வந்து உங்களுக்குத் தலைவர் ஆக்கிக்கொள்ளுங்கள்" என்று கூறினார். மறுநாட் காலை காளத்தி கோயில தானத்தார் கோயில் விசேஷ மரியாதைகளுடன் மழலை மங்கலம் வந்து கோவிந்த பட்டரிடம் இரவு தங்கள் கனவில் நடந்தவற்றைக் கூறிக் காளத்தி வந்தருளவேண்டும் எனப் பிரார்த்தித்தனர். கோவிந்தபட்டரும் தம் கனவும், அவர்கள் கனவும் ஒத்து இருந்ததைக்கண்டு மழலைமங்கலத்திலிருந்து அவர்களோடு காளத்தி சென்று அங்கே கோயில் தான நிருவாகத்துக்

குரிய இலச்சினை மோதிரமும் பெற்று ஒரு சிவனடியாராக வாழ்ந்து வந்தார்.

கோவிந்த பட்டருக்கு விடைகொடுத்த யாதவப் பிரகாசர் தம் சீடருடன் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தார். ஒருநாள் அவர் அருளாளப் பெருமாள் சன்னிதியில் சிஷ்யர்களுடன் போகையில் இளையாழ்வாரை அங்கே கண்டு துணுக்கமும்வியப்பும்எய்தியவராய் அவரைக் கண்டதில் மிகவும் மகிழ்ச்சியுற்றவர்போலப் பாவித்து, 'இளையாழ்வாரே விந்தியமலைக்காட்டிலே எங்களனைவரையுமே தவிக்கவிட்டு எங்கு சென்றீர்? நானும் உம்முடைய தோழர்களும் கானகமெங்கும் தேடி உம்மைக் காணாமல், உமக்கு ஏதோ நிகழ்ந்துவிட்டது என்றல்லவா துக்கப்பட்டோம். நல்ல வேளையாக உம்மை இங்கே காணப்பெற்றோமே! என்று கூறி அவரை நோக்கி, 'அது சரி எப்படி, எப்போது இங்கு வந்தீர்?'' என்று வினவினர். இளையாழ்வாரும் அக்கோஷ்டியைத் தான் பிரிந்தது முதல் காஞ்சிபுரம் சேர்ந்தது வரை நிகழ்ந்தவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் கூறினர். வியப்புடன் அந்நிகழ்ச்சிகளைக் கேட்ட யாதவப் பிரகாசர் "இவர் சமானியர் அல்லர், தெய்வாமிசம் பெற்றவர்'' என்று உணர்ந்தவராய் அவரை நோக்கி "சரி எப்படியோ வந்து சேர்ந்துவிட்டீர், எப்போதும் போல் நம்மிடம் வந்து போய்க்கொண்டிரும்'' என்று கூறினர். இளையாழ்வாரும் அப்படியே செய்வதாக வாக்களித்து அதன்படியே யாதவப்பிரகாசர் பாடம் சொல்லும் இடம் போய் முன்போல் கேட்டுவந்தார்.

சிலகாலம் கழிந்தது. அந்தப் பகுதியில் அரசனாக இருந்தவனின் மகளைப் பிரம்மரக்ஷஸ் பிடித்துக்கொண்டு மிகவும் துன்புறுத்தி வந்தது. அரசன் மிகவும் நொந்து இதைத் தீர்க்கும் மந்திரவாதி யாரேனும் உண்டோ என ஆராய்ந்தான். ஒற்றர்கள் எங்கும் ஆராய்ந்து இறுதியில் யாதவப்பிரகாசருக்கு அவ்வித்தை கைவரும் என்றுஅறிந்து அரசனுக்கு அறிவித்தனர். அரசன் உடனே தம் பிரதானிகளில் சிலரை யாதவப்பிரகாசரை அழைத்து வரும்படி அனுப்பினன். அவர்களும் அவரிடம்சென்று வந்தசெய்தியைக்கூறி அரசன் கோயிலுக்கு வரும்படி வேண்டினர். யாதவப்பிரகாசர் தம்முடைய மந்திர வித்தையிலே கர்வித்திருந்தவரான படியாலே பிரதானிகளை நோக்கி அலக்ஷியமாக இந்த அற்பச் செயலுக்கு நாம் அங்கு வரவேண்டியதில்லை. நம் பெயரை அதனிடம் கூறி "நாம் போகச் சொன்னோம்' என்று அதனிடம் சொன்னால்மட்டும் போதும் என்று கம்பீரமாகப் பதில் சொன்னர். பிரதானிகளும் அவர் வார்த்தையில் நம்பிக்கை வைத்து நேரே அரண்மனைபோய் அந்த பிரம்மரக்ஷஸ்ஸைப் பார்த்து உன்னை யாதவப் பிரகாசர் உடனே போகச் சொன்னர்'' என்று கூறினார்கள். அந்த பிரம்மரக்ஷஸ் வெடுக்கென்று அவர்கள் பக்கம் திரும்பி அவர்களை உருத்து நோக்கி "அப்படியா! யாதவப்பிரகாசனை அவனிருக்கும் இடத்தைவிட்டு நாம் போகச் சொன்னோம் என்று அவனிடம் போய்ச் சொல்லுங்கள்'' என்று கூவிற்று. பிரதானிகளும் பயந்து நடுங்கி யாதவப் பிரகாசரிடம் வந்து நிகழ்ந்ததைக் கூறினர். அவரும் கோபம் மிகுந்தவராய் உடனே அரண்மனையை நோக்கிப் புறப்பட்டார். அவர் போனபோது அந்த பிரம்மரக்ஷஸ் தன்கால்களை முடக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. யாதவப் பிரகாசர் தன் முஷ்டியை மடித்து அதனை நோக்கி நீட்டி நின்றுகொண்டு தாம் கற்ற மந்திரங்களைத் தமக்குள்ளே ஓதினர். பிரம்மரக்ஷஸ் அதுவரை மடக்கிவைத்த தனது கால்களை யாதவப் பிரகாசரை நோக்கி நீட்டி, கடகடவென்று சிரித்து அவரை நோக்கி "ஏ! யாதவப் பிரகாசா! நீ உள்ளுக்குள்ளே சொல்லும் மந்திரம் எனக்குத் தெரியாதா? இதுதானே அது என்று அவர் கூறிய மந்திரத்தைத்தான் உரக்கக் கூறி உனக்கும், இம்மந்திரத்திற்கும் போகக் கூடியவனல்ல நான். முற்பிறவியில் நீ யாராய் இருந்தனை? நான் யாராக இருந்தேன் என்பதறியாத நீயா என்னைப் போகச்சொல்பவன்? அவ்வுண்மை அறிந்தால் உனக்குப்பயப்படுபவன்'' என்று கேட்டது. யாதவப் பிரகாசர் திடுக்கிட்டு, வியப்படைந்து இதுஏதோ சக்திபெற்றதாய்த் தோன்றுகிறது என்று உன்னித் தன் முயற்சியை விடுத்து அதை நோக்கி "பூர்வ ஜன்ம நிகழ்ச்சிகளை அறியக்கூடிய ஞானம் இருக்கும்போது உனக்கு இந்நிலை ஏற்படக் காரணம் யாது''! என்று கேட்டார். பிரம்மரக்ஷஸ் கூறிற்று. "கேள். முற்பிறப்பில் நீ ஒரு உடும்பாக இருந்தாய். ஒரு பெரிய பாகவதக் கூட்டம் கோயிலினின்றும் (ஸ்ரீரங்கம்) புறப்பட்டுத் திருமலைக்குயாத்திரையாக வரும்

வழியிலே மதுராந்தகத்து ஏரிக்கரையிலே தங்கி நீராடி, பெருமாளை ஆராதித்து அமுது செய்து போயிற்று. அவர்கள் அமுதுசெய்த இடத்திலே சிந்திக்கிடந்த சேடப் பிரசாதத்தையும், தேங்கி நின்ற நீரையும் அதற்கருகேயுள்ள புற்று ஒன்றில் வசித்த நீ புசித்தாய். பாகவதர் போனகம் செய்த சேடத்தைப் புசித்ததன் பலன் இந்த உன்னுடைய பிராமண ஜன்மமும், பாண்டித்யமும். இனி என் விதியைக் கேள். நான் மகாசீலவானை பிராம்மணனாக இருந்தேன். ஒரு பிரபலமான யாகத்தைத் தொடங்கினேன். அதிலே அனேகம் மந்திரக்குறை, செயற்குறை உண்டாகி அதன் பயனாக உன் முன் இப்படி இருக்கிறேன்'' கேட்ட யாதவப் பிரகாசன் விடவில்லை. அவன் கேட்டான், "ஏ பிரம்ம ரக்ஷஸே! நீ கூறியபடி நான் உடும்பாக இருக்கையில் பாகவதர் கலத்துள்ள சேடத்தைப் புசித்தது உண்மையானால் அதற்குப் பலன் இது அல்லவே. எனக்கு மறு பிறவியே இல்லாத நிலைபல்லவா ஏற்பட்டிருக்கவேண்டும்'' என்ற. அதற்கு "நீ அறிவறிந்து அந்தப் பிரசாத வைபவம் இன்னபடி என்று உணர்ந்து அதனை உண்டாயானால் பலன் நீ கூறிய படியே கிட்டியிருக்கும். ஆனால் நீ பகுத்தறிவில்லாத ஜந்துவாக இருந்ததினால் உன்னுடைய அப்போதைய பசியைப் போக்கமட்டுமே நீ அதை உண்டாய். அதனால் அம் மேலான பலன் உனக்குக் கிட்டவில்லை'' என்று பிரம்மரக்ஷஸ் பதில் கூறிற்று. யாதவப் பிரகாசர் திகைத்தவராய்த் தனக்குள்ளே "நம் சக்தியால் இதை விரட்ட இயலாது. நல் வார்த்தை கூறியாவது இதனைப் போகச் செய்யாவிட்டால் அரசன் நம்மிடம் வைத்திருக்கும் மதிப்புப் போய்விடும்'' என்று எண்ணமிட்டுப் பிரம்மரக்ஷஸைநோக்கி "அது சரி. உனக்கு இந்நிலை போகும் காலந்தான் எது? அது யாரால்தீரும்? அதையாவது உண்மையாகக் கூறுவாயா?' என்று கேட்டான். பிரம்மரக்ஷஸ் தன் வேகத்தையெல்லாம் ஒடுக்கிக்கொண்டு உம்முடைய பக்கலிலே வாசித்து வருகிறாரே இளையாழ்வார். அவர் எழுந்தருளித் தம்திருவாய்மலர்ந்து என்னைப் "போ'' என்று சொன்னால் அதுவே எனக்கு விமோசன காலம் என்று கூறிற்று. யாதவப் பிரகாசருக்கு ஒருபுறம் பொறாமையும் ஒரு புறம் அச்சமும் ஒரே காலத்தில் தோன்றின. தம்மைவிட இளையாழ்வார் உயர்ந்தவர் என்று கேட்டதில் பொறாமை; எப்படியாவது இதை நீக்காவிடில் தம் மதிப்புப் போய் விடுமே என்ற அச்சம். வேறு வழியின்றி இளையாழ்வாரை அழைத்து வர ஆள் அனுப்ப அவரும் அங்கு வந்து சேர்ந்தார். வந்த இளையாழ்வாரை நோக்கி யாதவப் பிரகாசர் பிரம்மரக்ஷஸ் ஏறிய அரசகுமாரியைக் காட்டி இவளைவிட்டு இதனைப் போகச்சொல்லும் என்று கூறினார். இளையாழ்வார் பிரம்மரக்ஷஸை நோக்கி "நீ இவளை விட்டுச் சென்றுவிடு'' என்று ஆணையிட்டார். உடனே பிரம்மரக்ஷஸ் இளையாழ்வார் திருவடிகளிலே விழுந்து வணங்கி "சுவாமி! என் போன்ற பாபிகளை உய்விக்கவல்லவோ தேவரீர் உம்முடைய வைகுந்த வாழ்வையும், ஆதிசேஷன் என்ற திருநாமத்தையும்விட்டு இவ்விருள்தரு மாஞாலம் எழுந்தருளியது. ஆகையால தேவரீர் திருவடிகளை அடியேனுடைய சென்னிமேல் சாத்தினால் ஒழிய அடியேன் போகமாட்டேன்'' என்று தன்தலையைத தாழ்த்த, இளையாழ்வாரும் தம் தாமரைப் பாதங்களை அதன் சென்னியின்மேல் வைத்ததும், அந்தப் பிரம்மரக்ஷஸ் அவரை வணங்கி எழுந்து யாதவப் பிரகாசரைப் பார்த்து "கலிகெட ஒருவன் தோன்றுவான்'' என்ற வாக்கியத்தைக் கற்றும், பிறர்க்குரைத்தும் இருக்கிறீரேயல்லது உன்னருகிலேயே அவர் இருப்பதை உணர்ந்தாயில்லை. உன் வாழ்நாளை அவம் போக்கினாய்'' என்று கூறி, கூடிய அனைவரையும் பார்த்து "இதோ இம்மகானுடைய திருவருளால் நான் திவ்ய தேகம் பெறப் போகிறேன். பாரீர்!'' என்று கூறிற்று. இளையாழ்வார் "நீ போய் விட்டாய் என்பதற்கு என்ன அடையாளம்?'' என்று அதை நோக்கிக் கேட்டார். பிரம்மரக்ஷஸ் நான் போவதற்கு அடையாளமா? இந்த அரசமரத்தை முறித்துக்கொண்டு போவேன்! அதுதான் சான்று. இதோ போகின்றேன்'' என்று கூறியதும் எதிரில் நின்ற அரசமரம் சடசடவென்று முறிய, அருகிருந்தோர் யாவரும் கண் காண அங்கே ஒரு ஒளியுண்டாகி வட்டமிட அவ்வளைவு மத்தியிலே ஒரு திவ்ய தேஹம் தோன்றி மேலே சென்று மறைந்தது.

(தொடரும்)

# மலைநாட்டுத் திருப்பதி யநுபவம்

[மகாவித்துவான் திரு. P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்]

மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் பன்னிரண்டு திருப்பதிகளின் அநுபவம் முற்றிற்று. இனி அநுபவிக்கவேண்டியது ஒன்றே எஞ்சியுள்ளது. அதுதான் திருவனந்தபுரம். அனந்தசயனமென்றும் அனந்தபத்மநாபமென்றும் வழங்கப்படுவது இத்திருப்பதியேயாகும். திருவேந்திரமென்பது இத்தலத்திற்கே சிதைவான வழக்கு. மலைநாட்டுத் திருப்பதிகளுக்கு இதுவே சிகரமானது. இதற்கு அங்கமானவை மற்றைப் பன்னிரண்டு திருப்பதிகளும். அங்கங்களை யநுபவித்துவிட்டு அங்கியை யநுபவிப்போமென்று விட்டிருந்தோம்; அங்கங்களை யெல்லா மநுபவித்து முடித்தோமாதலின் இப்போது அங்கியை யநுபவித்துத் தலைக்கட்டுகிறோம்.

ஆழ்வார்களுள் நம்மாழ்வாரொருவரே இத்தலத்தைப் பாடினவர். துணுக்கைப் பாசுரமாகவன்றியே ஒரு பதிகம் பாடியுள்ளார். திருவாய்மொழி பத்தாம்பத்தில் இரண்டாவதான 'கெடுமிடராயவெல்லாம்' என்று தொடங்கும் பதிகமே இத்தலத்திற்குப் பாடல். [ஒருநூறு பாட்டுக்களைப் பத்து என்று வழங்குவது வைணவமரபு.]

ஆழ்வார்களுள் குலசேகராழ்வார் மலைநாட்டிலேயே திருவவதாரம் செய்தவரென்று சொல்லப்படுகிறார். 'இரிஞாலகுடா என்னும் ஊருக்கருகிலுள்ள திருவஞ்சிக்களமென்னும் தலத்தில் அவதரித்தாராகச் சொல்லப்படுகிறார். அப்படி இவ்வாழ்வார் மலையாளத்தில் அவதரித்தவராயிருந்தால் மலைநாட்டுக்குத் திலகமான இத்திருவனந்தபுரத்தைப் பாடாதிருப்பாரா? அவ்வாழ்வாரோ இத்தலத்தைப் பாடினவரல்லர். ஆகவே குலசேகராழ்வார் தென்னாட்டினரேயல்லது மலைநாட்டினரல்லர் என்றொரு பிரசாரம் ஒருபுறமிருந்து வருகிறது. இதைப்பற்றின ஆராய்ச்சிகளை நாம் இங்கு அதிகமாக வைத்துக்கொள்ள விரும்புகின்றிலோம். பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும் முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் ஒருவரையொருவர் சந்தித்து அத்தலத்தெம்பெருமானைத் தொழுதேத்தியவர்களென்று சம்பிரதாயம். ஆனால் பொய்கையாரும் பூதத்தாரும் மட்டும் அத்தலத்தைப் பாடியுள்ளார்களேயன்றிப் பேயாழ்வார் பாடிற்றிலர். இவ்வாழ்வார் பிரபந்தம் தொடங்கும்போதே "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்றருளிச்செய்தது திருக்கோவலூர்ப் பெருமானையேயென்று ஆசிரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். இதனை இராமாநுச நூற்றந்தாதியில் "மன்னிய பேரிருள் மாண்ட பின், கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை காட்டுந் தமிழ்த்தலைவன்" என்று திருவரங்கத் தமுதனாரும் வெளியிட்டுள்ளார். இங்குத் தமிழ்த் தலைவன் என்றது பேயாழ்வாரையே. ஆனாலும் பேயாழ்வாருடைய திருவந்தாதிப் பிரபந்தத்தில் திருக்கோவலூர்ப் பேச்சு இல்லையென்பது திண்ணம். இதனால் பேயாழ்வார்க்குத் திருக்கோவலூரில் தொடர்பு இல்லையென்று சொல்லத்தகுமோ? ஆக, குலசேகராழ்வார் திருவனந்தபுரத்தைப் பாடவில்லையென்பது பற்றின விசாரம் பயனற்றதென்று விடுப்போம்.

ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வார்க்கும் நம்மாழ்வார்க்கும் ஒரு வாசியுண்டு. அஃதென்னெனில்; திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் திருப்பதிகளுக்குப் பதிகம் பாடுவதையே பிரதானமாகக் கொண்டவர். வரிசையாகத் திருப்பதிகளுக்குப் பதிகமே பாடிவந்துள்ளார். நம்மாழ்வாருடைய முறை இத்தகைத்தன்று. திருவாய்மொழியில் முதற்பத்தில் ஒரு திருப்பதிக்கும் பதிகம் பாடிற்றிலர். இரண்டாம்பத்தில் இறுதிப் பதிகமொன்று மட்டுமே திருமாலிருஞ்சோலைத் திருப்பதியைப் பாடினது. மூன்றாம் பத்தில் மூன்றாம் பதிகமொன்று மட்டுமே திருவேங்கட மலைக்குப் பாடல். நான்காம் பத்தில் இறுதிப் பதிகமொன்று மட்டுமே திருக்குருகூர்க்குப் பாடல். ஐந்தாம்பத்தில் நான்கு பதிகங்கள்; ஆறாம்பத்தில் ஐந்து பதி

கங்கள், ஏழாம்பத்தில் மூன்று பதிகங்கள். எட்டாம் பத்திலும் மூன்று பதிகங்கள்.

இனி ஒன்பதாம்பத்திலும் பத்தாம்பத்திலும் திருப்பதிகளுக்குப் பாடல் அதிகமாகவுள்ளது; வடமதுரை, திருப்புளிங்குடி, வரகுணமங்கை, திருவைகுந்தம், திருக்காட்கரை, திருமூழிக்குளம், திருநாவாய், திருக்கண்ணபுரம், திருமோகூர், திருவனந்தபுரம், திருவாட்டாறு, திருமாலிருஞ்சோலை, திருப்பேர்நகர் ஆகப் பதின்மூன்று திருப்பதிகள் (முடிவில்) பாடப்பட்டுள்ளன. கீழ் எட்டு பத்துக்களிலுஞ் சேர்ந்து பதினன்கு திருப்பதிகளைப் பாடினவர் மேலிரண்டு பத்துக்களில் மட்டும் பதின்மூன்று திருப்பதிகளைப் பாடின விதற்குக் காரணம் ஏதென்னில்; கேண்மின். பிறந்தகத்தினின்றும் புக்ககஞ் செல்லப் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாளிருந்த விடத்திலே தன்னோடு மிகவும் முகம் பழகியிருந்த மிக்க வன்பினரான சில பெண் பிள்ளைகளை யணுகி 'நங்காய்! நான் போய் வருகின்றேன்; மாதே! நான் சென்று வருகின்றேன், தோழீ! எனக்கு விடைதர வேணும்' என்றிங்ஙனே சொல்லிச் சொல்லி விடைபெற்றுக்கொள்வதற்காகச் சில பல குறடுகள் ஏறியிறங்குவதுண்டே; அதுபோலவே இவ்வாழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்திற்குப் பயணம் செய்ய நிச்சயித்தவராகி, தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான திருப்பதிகளிலே எம்பெருமான்கள் பக்கலிலே சொல்லிக்கொள்ள நுழைந்து புறப்படுகிறார் என்பது மருமமான விஷயம். ஆகவே திருவனந்தபுரம் ஆழ்வாருடைய அபரிமிதமான அன்புக்கு இடமான தலம் என்று உணரப்படும்.

இந்நிலவுலகத்தில் இத்திருவனந்தபுரத் திருப்பதிக்குச் சமமானதொரு தலம் வேறில்லையென்று சொல்லலாம். இத்தலத்தெம்பெருமானுடைய மூலத் திருமேனி பள்ளிகொண்ட திருக்கோலம்; அத்திருமேனியைச்சேவிக்க மூன்று திருவாசல்கள் அமைந்துள்ளன. ஒரு திருவாசலாலே திருமுக மண்டலத்தை மட்டுமே சேவிக்கலாகும்; மற்ருெரு திருவாசலாலே திருநாபியை மட்டுமே சேவிக்கலாகும். இன்னொரு திருவாசலாலே திருவடியை மட்டுமே சேவிக்கலாகும். இதனால் திருமேனியின் திருவளர்த்தி இத்துணையாக வேறெங்கு மிலது என்பது தெரியவரும். இத்திருப்பதியின் அருகேயுள்ள திருவாட்டாறென்னும் திருப்பதியை ஒருபுடையொப்புச் சொல்லலாமிதற்கு.

இப்பதிகத்தில் திருவனந்த சயனப் பெருமாளைச் சேவிக்க வருபவர்கள் மூன்று வகுப்பாகக் காட்டப்பட்டுள்ளார்கள். "அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்கு அகப்பணி செய்வர் விண்ணோர்" என்னும் பாசுரத்தில் நித்தியஸூரிகளில் தலைவரான ஸேனை முதலியார் தம்முடைய ஸேனைகளோடுங்கூட வந்து பணிவதாகச் சொல்லிற்று. "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதிசேர் அனந்தபுரத்து" என்றவிடத்தில் பிரமன் முதலிய தேவர்கள் வந்து பணிவதாகப் பேசிற்று. "படமுடையரவிற் பள்ளி பயின்றவன் பாதங்காண நடமினோ நமர்களுள்ளீர்!" என்னும் பாசுரத்தில் ஆழ்வார்போல்வாருடைய உபதேசங் கேட்டு வந்து பணிகின்றவர்களும் இந்நிலவுலகத்திலுள்ளவர்களுமான அடியவர்கள் தொழுமாறு தெரிவிக்கப்படுகின்றது. ஆக இம்மூன்று வகுப்பினரும் வந்து பணியுமிடத்து ஒருவரோடொருவர் சேரத்தகாதவர்களாயிருக்கின்றனர். ஏனென்னில்; "அமரர்கோன் அர்ச்சிக்கின்று" என்றவிடத்திற் சொல்லப்பட்ட நித்யஸூரிகளுள் தலைவரான ஸேனைபதியாழ்வானும் அவருடைய இனத்தவர்களும் பிரமனிந்திரன் முதலான இடைத்தேவர்களோடு சேரார்கள். இவ்விடைத் தேவர்கள் இவ்வுலகத்தவர்களான மனிச்சர்களோடு சேரார்கள். ஆகவே இம்மூவகுப்பினரும் ஒருவரோடொருவர் சேராமே நின்று பணிய வேண்டியதாயிற்று. இதற்காக அனந்த பத்மநாபப் பெருமாள் மூன்று திருவாசல்களை யிட்டு முதல் வகுப்பினர்க்குத் திருமுக மண்டல சேவையையும், இரண்டாம் வகுப்பினர்க்குத் திருநாபி சேவையையும், மூன்றும் வகுப்பினர்க்குத் திருவடி சேவையையும் காட்டிக் கொடுத்தருள்வதாக ஆசாரியர்கள் மருமங்கண்டு கூறியுள்ளார்கள்.

இனி இப்பதிகத்தின் பாசுரங்களை அடைவே அநுபவிப்போம்.

1. கெடுமிடராய வெல்லாங் கேசவா
வென்ன நாளுங்
கொடுவினை செய்யுங் கூற்றின்
தமர்களும் குறுக கில்லார்

விடமுடை யரவிற்பள்ளி விரும்பினன்
சுரும்ப லற்றும்
தடமுடை வயலனந்த புரநகர்
புகுது மின்றே.

கேசவ நாமத்தைச் சொன்னவளவில் இடர் என்று பேர் பெற்றவையெல்லாம் தொலைந்துபோம்; இடைவீடின்றிக் கொடுமை புரிய நிற்கிற யமபடர்களும் அணுகமாட்டாது ஓடிப்போவர்கள். ஆன பின்பு, நச்சர வினணைமேல் விரும்பிய பள்ளிகொள்ளும் பெருமானுறைகின்ற இடமாய், வண்டுகள் ஆரவாரிக்கின்ற தடாகங்கள் நிறைந்த கழனிகள் சூழ்ந்ததாயுமுள்ள திருவனந்தபுரத் திருப்பதியை இன்றே போய்ப்புகுவோம் என்பது பதப்பொருள். இனி விசேஷப் பொருள் கேளீர்.

பாட்டுத் தொடங்கும்போதே அரிய பெரிய இரண்டு பேறுகளைப் பேசுகின்றார்; "கேசவாவென்ன இடராயவெல்லாங் கெடும்" என்றதுஒருபேறு;"கூற்றின் தமர்களும்குறுக கில்லார்" என்றது மற்றொரு பேறு. **கேசவா** வென்றுமூன்றெழுத்தைச்சொன்னவளவிலே இடரென்று பேர்பெற்றவையெல்லாம் கெடும் என்று சொன்னவிது அதிவாதம்போல் தோற்றும்; அதிவாதமல்ல, உண்மையுரையேயாம். **"மேரு மந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண;, கேசவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நச்யதி."** என்பது மஹரிஷிகளின் திருவாக்கு. எத்தகைய கொடிய வியாதிகளும் மருத்துவனைப்பற்றினார்க்குத் தொலைந்தொழிவதுபோல, கேசவனைப் பற்றினார்க்குக் கொடிய வினைகளெல்லாம் தொலைந்தொழியுமென்பது இந்த வசனத்தின் கருத்து. எம்பெருமானுடைய திருநாமங்களுள் **கேசவ** நாமம் மிகச்சிறந்தது. நாராயண நாமத்திலும் சிறந்தது என்று சொல்லலாம். இத்திருநாமத்திற்கு மூவகைப் பொருள்கள் ஆசாரியர்கள் பேசியுள்ளவை. முதற் பொருள் கேண்மின். இக்கேசவ நாமம் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் வருகிறதன்றோ; அங்கு ஆதிசங்கர பகவத் பாதாள் தமது பாஷ்யத்தில் ஹரிவம்ச மென்கிற புராணத்திலிருந்து கதையை யெடுத்துக்காட்டி வியாக்கியானம் செய்துள்ளார்கள். ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குக் கேசவனென்னுந் திருநாமத்தைத் தந்தவர் பரமசிவர். அவர் இத்திருநாமத்தின் பொருளைத் தாமே விவரணம் செய்துகொண்டே தருகின்றார். அந்த விவரணம் வருமாறு;—

**"கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத:**
**ஈசோஹம் ஸர்வ தேஹிநாம்**
**ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ**
**தஸ்மாத் கேசவ நாமவாந்."**

என்பது பரமசிவர் கூறிய சுலோகம். இது கேசவநாமத்தின் பொருளை விவரிப்பதாகும். **க: ஈச: வ:** என்று மூன்று சொற்கள் உள்ளனவன்றோ. இவை மூன்றுக்கும் பொருள் தெரிவிக்கப்படுகின்றது. **க:**—பிரமன்; **ஈச:**—பரமசிவன்; ஆக இவ்விருவரையும் **வ:**—வஹிப்பவர்; தம் திருமேனியிலிருந்து தோற்றச் செய்தவர் என்றதாயிற்று. இதுவொரு பொருள்.

இனி இரண்டாம் பொருளாவது,கண்ணபிரான் மதுரையில் வஸுதேவ தேவகிகளின் புதல்வனாய்ப் பிறந்து "ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவி லொருத்திமகனா யொளித்துவளர" என்ற திருப்பாவைப் பாசுரத்தின் படியே திருவாய்ப்பாடியிற் போந்து நந்த கோபன் குமரனாய் எசோதை யிளஞ்சிங்கமாய் வளருகிற காலத்திலே தன்னைக்கொல்லக் கருதிய கம்ஸனது ஏவுதலால் குதிரை வடிவுகொண்டு நலியவந்த **கேசி**யென்னு மசுர வதஞ் செய்தருளினன் கண்ணபிரான் என்பது வரலாறு. ஆக, கேசியைக் கொன்றவன் என்பது காரணமாகக் கேசவநாம மாயிற்றென்பது இரண்டாவது பொருள்.

இனி மூன்றும் பொருளாவது, **கேச** மென்று மயிர்முடியைச் சொல்லி "எழிலுடைய வம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர் குழலழகர்" என்றும், "களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே" என்றும் ஆண்டாளருளிச் செய்தபடிக்கும்,"மைவண்ண நறுங் குஞ்சி குழல்பின்தாழ" என்று திருமங்கையாழ்வார் அநுபவித்தபடிக்கும் கேசபாசத்தினழகு பொலிந்தவர் என்பதாம். ஆக இம் மூவகைப் பொருள்களையும் நன்குணர்ந்து அநுபவித்து இத்திருநாமத்தைச் சொல்லவே இடராயவெல்லாம் கெடும்.

**இடர்** என்னுஞ்சொல் துக்கத்தையும், துக்கத்திற்குக் காரணமான பாவத்தையும் சொல்லும். எல்லாவகைத் துன்பங்களையும்,

அத்துன்பங்களுக்கு அடியான பாவங்களையும் தொலைக்கவல்லது கேசவ நாமஸங்கீர்த்தனம் என்றதாயிற்று.

திருவனந்தபுரம் புகுவார்க்குச் சொன்ன முதற் பலன் இது. இனி இரண்டாவது பலன் "கொடுவினை செய்யுங் கூற்றின் தமர்களும் குறுககில்லார்" என்பது, நமன் தமராலும் ஆராயப்படமாட்டார்க ளென்றவாறு. கீழ் எல்லா இடரும் கெடுமென்றபோதே நரக வேதனைகளும் கெடுமென்று சொல்லிற்றாகத் தேருதோ? கூற்றின் தமர்களும் குறுககில்லா ரென்று தனிப்படச் சொல்ல வேணுமோ வென்று சங்கை தோன்றும்; பொதுவாகச் சொல்லுமதில் சேர்ந்தவற்றையும் தனிப்படச் சொல்லுவதானது ஒரு விசேஷத்தைக்காட்டி நிற்கும். மிகக் கொடிய நகர வேதனைகளை அநுபவித்தே போக்கவேணுமென்று நினைக்க வேண்டா; கேசவாவென்ற வளவிலே அவை யும் தொலையுமென்றதாயிற்று. நரகத்தில் பாபிகளைப் பசனம் செய்வதற்காக யமதரும ராஜன் பலரை ஏற்பாடு செய்திருக்கிறு னன்றோ. அவர்களிடத்தில் யமன் ஒரு கட் டளையிட்டு வைத்திருக்கிறான். அதாவது, 'மிகக் கொடிய பாவங்களைச் செய்ததன் பல ஞக உங்களால் கோர தண்டனைகளைப் பெறு விக்கப்படுமவர்களை நான் நேரில் காணவேண் டும்; அப்போது என்னை நீங்கள் அழைக்க வேணும்' என்று. அப்படியே அவன் அழைக் கப்பட்டு வந்து காணும்போது சொன்ன சொல் புராணங்களில் பிரசித்தமாகவுள்ளது. (அதாவது) "நரகே பச்யமாநஸ் துயமேந பரி பாஷித:, கிம் த்வயா நார்ச்சிதோ தேவ: கேசவ: கிலேச நாசந:" என்று. கொடிய நரகவேத னையை யநுபவிக்கும் மஹாபாபியை நோக்கி யமன் கேட்கிறானும் - 'அடா படுபாவி! எல் லாக் கிலேசங்களையும் போக்கவல்லவனை கேசவனை நீ அர்ச்சிக்கவில்லையோ?' என்று. அதனால் கேசவனை அர்ச்சித்தவர்களுக்கு நரகவேதனை நேராதென்பது காட்டப்பட்ட தாம். கேசவநாமத்தை ஸங்கீர்த்தனம் பண் ணுவதும் கேசவனை அர்ச்சித்ததாகுமென்று ஆழ்வார் திருவுள்ளம்.

இனி, பின்னிரண்டடிகளினால் திரு வனந்தபுரத்தின் இனிமையைத் தெரிவித்து அத்திருப்பதியிலே சென்று புகவேண்டியது அவசியமென்பதைத் தெரிவித்தருளுகிறார். இவ்விரண்டடிகளின் விசேடப் பொருள்களை அடுத்த இதழில் விவரிப்போம்.

(தொடரும்)

## "மாயா இயந்திர தனு"

ஆசிரியர் மெய்கண்டார் நமது உடம்பை "மாயா இயந்திர தனு" எனச் சிவஞானபோதம் மூன்றும் சூத்திரத்திற் குறிப்பிடுகின்றார். 'மாயையினால் ஆக்கப் பட்ட இயந்திரத்தைப் போன்ற உடம்பு' என்பது அதன் பொருள்.

வியக்கத்தக்க ஓர் இயந்திரத்தைப் போன்று அமைந்துள்ள நமது மனித உடம்பில்600 தசை நார்கள், 1000 மைல் நீளமுள்ள இரத்தக் குழாய்கள், 550 இரத்த நாளங்கள், 16 சதுர அடிப் பரப்புடைய தோல், 15 லட்சம் வியர்வைக் கோளங்கள், மூச்சுப் பையில் தேன்கூடு போன்ற 70 கோடி கண்ணறைகள், $3\times10^{12}$ நரம்புக் கண்ணறைகள், 300 லட்சம் வெள்ளை யணுக்கள், $18\times10^{13}$ சிவப்பணுக்கள், $2\frac{1}{2}$ லட்சம் தலைமயிர்கள் ஆகியவை உள்ளன. 70 ஆண்டுகளில் நமது இருதயம் 250 கோடி தடவைகள் துடிக்கின்றது. 5,00,000டன் இரத்தத்தை வெளியேற்றி உடம்பிற் பரவச் செய்கின்றது. நாள்தோறும் 36 அவுன்ஸ் அளவு உமிழ்நீர் சுரந்து விழுங்கப்படுகின்றது. 120 முதல் 240 அவுன்ஸ் வரை வயிற் றிற் செரிநீர் ஊறி, உணவைச் செரிப்பித்துக் கிருமிகளைக் கொல்லுகின்றது.

இவற்றையெல்லாம் ஒரு சிறிதேனும் உன்னித்து உணரவல்லார்க்குக் கடவுள் உணர்ச்சி உண்டாகாதிருத்தல் இயலுமோ?

# சட்டிச் சாறு

**திரிகூட ராசப்பக் கவிராயர்:** ஏறத்தாழ 200 ஆண்டுகட்கு முன்பு இருந்தவர். பிற்காலக் கவிஞர்களுள் பெரிதும் சிறப்புற்றவர். அவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் குற்றாலத் தலபுராணமும், குற்றாலக் குறவஞ்சியும் மிகவும் புகழ்பெற்றவை.

**குற்றாலத் தலபுராணம்:** சொற்பொருட்சுவை நலங்கள் பலவும் துளும்பித் திகழ்வது; கற்றுவல்ல புலவர்களால் மிக்குயர்த்துப் போற்றப்படுவது.

'**குற்றாலக் குறவஞ்சி**' என்பதோ, இயலிசை நாடகம் என்னும் முத்தமிழ்க்கும் நிலைக்களனாய் விளங்கி, எவரையும் மகிழவைக்கும் மாட்சிமை யுடையது.

'**குறவஞ்சி**' என்பது குறத்தி ஒருத்தி குறிசொல்லுவது போலப் பாடப்படும் ஒரு சிறு பிரபந்தம். அதன்கண் அமைக்கப்படும் பலவகைச் செய்திகளோடு, குறவர் குறத்தியரின் செயல் இயல்களும் விளங்குமாறு நாடகப் பாங்கு அமைய நன்கினைத்துப் பாடப்பெறும். அம்முறையை ஒட்டிவரும் ஒரு பகுதியில், குற்றாலக் குறவஞ்சியின்கண் **கந்தர் சஷ்டி விழா**வைப்பற்றிய குறிப்பு ஒன்றும் சுவைமிக வருகின்றது:

"வள்ளிக் குறத்தியை மணந்த முருகக் குறவன், முதல் வேட்டைக்குப்போனான். ஆறு நாட்கள் கழித்து அவனுக்கு ஒரு கொக்கு அகப்பட்டது. அக்கொக்கை அவித்து, ஒரு சட்டியில் அவன் சாறு (குழம்பு) வைத்தான். (புலாலை வெறுக்கும்) வேதப் பிராமணர், சைவர், முனிவர் ஆகிய எல்லோரும் கொக்கை அவித்த சட்டிச்சாறு (சூரபதுமனாகிய மாமரத்தை அழித்த கந்தர்சஷ்டி விழா) மிகவும் நல்லது என்று ஏற்றுக் கொண்டனர்."

''மீறும் இலஞ்சிக் குறத்தியைக் கொண்டசெவ்
　வேட்குறவன், முதல் வேட்டைக்குப் போனநாள்,
ஆறுநாட் கூடி ஒருகொக்குப் பட்டது;
　அகப்பட்ட கொக்கை அவித்து, ஒரு சட்டியில்
சாறாக வைத்தபின் வேதப் பிராமணர்
　தாமும் கொண்டார்! சைவர் தாமும் கொண்டார்! தவப்
பேரு முனிவரும் ஏற்றுக் கொண்டார்! இதைப்
　பிக்குச்சொல் லாமலே கொக்குப் படுக்கவே......''

இச் செய்யுளில் முருகனைக் '**குறவன்**' என்ற பொருத்தமும், அவன் சூரபதுமனோடு செய்த போரினை '**முதல்வேட்டை**' என்ற சிறப்பும் நயம் செறிந்தன. மேலும் இதன்கண்,

கொக்கு—பறவை, மாமரம்
அவித்தல்—வேகவைத்தல், அழித்தல்
சட்டி—மட்கலம், சஷ்டி,
சாறு—குழம்பு, விழா
வைத்தல்—காய்ச்சுதல், நிகழச் செய்தல்.

என இருபொருட் குறிப்பு அமையும்படி வழங்கிய புலவரின் சொல்லாட்சித்திறனும், பெரிதும் போற்றத் தக்கதாகும்.

**கந்தர் சஷ்டி விழா**, வேதப்பிராமணர் சைவர் முனிவர் ஆகிய பெருமக்களெல்லாம் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டாடிவரும் மாண்புடையது என்பதனை, இப்பாடலால் கவிஞர் விளக்கியிருத்தல் காணலாம்.

## அறுவகைச் சமயங்கள்

'அறுவகைச் சமயங்கள்' என்னும் தொடர் தொன்றுதொட்டு வழங்கி வருவது. சமய தத்துவ நூலாசிரியர்கள் இவ் வறுவகைச் சமயங்கள் யாவை? என்பன குறித்துத் தத்தம் நூல்களிற் பல்வேறு வகைகளிற் குறிப்பிட்டுள்ளனர். எனினும், அறுவகைச் சமயங்கள் அல்லது "ஷட் தரிசனங்கள்" எனப்படும். நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் மீமாம்சை வேதாந்தம் என்னும் ஆறுமே; ஏனையவற்றைவிட மிகவும் பழமை வாய்ந் தனவாகும்.

இவைகளை முறையே அக்கபாதர் (நியாயம்), கணாதர் (வைசேடிகம்), கபிலர் (சாங்கியம்), பதஞ்சலி (யோகம்), ஜைமினி (மீமாம்சம்), வாதராயணர் (வேதாந்தம்) என்பவர்கள் விளக்கி நூல்கள் இயற்றியருளினர்.

பழங்காலத்திலேயே இந்திய நாடானது கிரேக்கர் உரோமர் முதலிய மேலைநாட்டு மக்களுடன் வாணிகம் முதலிய தொடர்புகள் கொண்டிருந்தது. அதன் பயனாக இருநாடு களும் தமக்குள் பல பொருள்களைக் 'கொண்டும் கொடுத்தும்" கலந்து உறவாடி மகிழ்ந்தன.

இந்திய நாட்டுத் தத்துவக் கொள்கைகளை ஆராய்ந்துணர்ந்த சர். வில்லியம் ஜோன்ஸ் என்னும் பேரறிஞர் கூறுவது, நாம் அறிந்து மகிழ்ந்து பயன்பெறத் தக்க செய்தியாகும்.

"இந்தியத் தத்துவக் கொள்கைகளுள் நியாயம் பெரிபடெடிக் (Peripatetic) கொள்கையையும், வைசேடிகம் ஐயோனிக் (Ionic) கொள்கையையும், மீமாம்சம் பிளேட் டோவின் கொள்கையையும், சாங்கியம் இட்டாலிக் (Italic) கொள்கையையும், யோகதத்து வம் ஸ்டாயிக் (Stoic) கொள்கையையும் பெரிதும் ஒத்துள்ளன. எனவே கௌதமர் என் னும் அக்கபாதர் அரிஸ்டாட்டிலையும் (Aristotle), கணாதர் தேல்சையும் (Thales), ஜைமினி சாக்ரடீசையும் (Socrates), வியாசர் எனப்படும் வாதராயணர் பிளேட்டோவை யும் (Plato), கபிலர் பித்தாகரசையும் (Pythogoras), பதஞ்சலி ஜெனோவையும் (Zeno) போன்றவர்களாகக் காணப்படுகின்றனர்."

மேனாடு கீழ்நாடுகளின் தத்துவக் கொள்கைகளையும் நூல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து உணர விரும்புபவர்களுக்கு, இது பெரிதும் பயன்படுவதாகும்.

## ஒரேவகை யுணர்வு

சைவம் வைணவம் என்னும் இரண்டும் தமிழ்நாட்டிற்கு இரண்டு கண்களைப் போன்றவை. இவ்விரு பெருஞ் சமயங்களும் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இணைந்து இயைந்து நிலவி வருபவை. ஆழ்வார்களும் நாயன்மார்களும் இத் தமிழகத்தில் தோன்றி, அரும்பெருஞ் செயல்கள் ஆற்றி, இறையருளுணர்ச்சியினை யாண்டும் பரப்பினர்.

தெய்விக நலம் பொதிந்த அவர்தம் திருவருட் பாடல்கள், அழியாத கலைப்பெருஞ் செல்வங்களாகத் திகழ்கின்றன. அவற்றின் வாயிலாக அவர்களின் அருளனுபவங்களையும் அறிவுரைகளையும் அறிந்துணர்ந்துகொண்டு உய்ய நமக்கு வாய்ப்புள்ளது. 'பெரிய உள் ளங்கள் ஒரே வகையில் நினைக்கும்' (Great minds think alike) என்பதற்கு ஏற்ப, அப் பெருமக்களின் திருப்பாடல்களில், நாம் பல ஒற்றுமைக் கருத்துக்களையும், ஒரேவகையுணர்வு அனுபவங்களையும் காண்கின்றோம். அவர்களின் ஓங்கியுயர்ந்த சிறந்த பெரு நிலையினை அப்பாடல்களின் மூலம் நாம் அறிந்து மகிழ்கின்றோம்.

பின்வரும் இரு பாடல்களும் சொற்பொருள் அமைப்புக்களாலும், உணர்வு அனு பவங்களாலும் ஒத்திருத்தல், நம்மனோர் உணர்ந்து மகிழத்தக்கது.

"உள்ளத்தே யுறையும் மாலை உள்ளுவான் உணர்வொன் றில்லாக்
கள்ளத்தேன் நானும் தொண்டாய்த் தொண்டுக்கே கோலம் பூண்டேன்
உள்குவார் உள்ளிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கிப்போய் என்னுள் ளேநான் விலாவிறச் சிரித்திட் டேனே"

—தொண்டரடிப் பொடியாழ்வார்.

" கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியேன் ஆகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே"

—திருநாவுக்கரசர்.

## வட எல்லைப்போர் வெற்றிக்கு வழிபாடு

சென்னைத் திருமயிலைக் கபாலீச்சுரர் கோயிலில் 29—10—62 முதல் 3—11—62 வரையில் பாரத நாட்டு வட எல்லைப்போர் வெற்றி குறித்துச் சிறப்பு வழிபாட்டுக் கூட்டம் நடைபெற்றது. 29—10—62 திங்கள் அன்று மாலை அறநிலைய அமைச்சர் **திருமிகு. எம். பக்தவத்சலம், பி.ஏ., பி.எல்.,** அவர்கள் அவ்வழிபாட்டுக் கூட்டத்தைத் தொடங்கி வைத்தார்கள். அதுபோது, வட எல்லைப்போர் குறித்து மக்கள் கலக்கம் அடையவேண்டாம் என்றும், மாலை தாம் சட்டசபையில் உரையாற்றிக் கொண்டிருக்கையில் ஓரளவு ஆறுதல் தரத்தக்க தகவல்கள் கிடைத்துள்ளன என்றும், முருகப் பெருமான் தீமையின் வடிவாகிய சூரபதுமனை அடக்கி வெற்றிகொண்ட விழாவே கந்தர் சஷ்டி விழாவாதலின், அப்பெருமான் அருளால் மிக விரைவிலேயே நம் நாடும் வெற்றியடையும் என்றும், பாரத நாடு வெற்றியடைய மக்கள் அனைவரும் ஒன்று பட்டுத் தேசபக்தியுடன் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்றும் கூறினார்கள்.

அடுத்துத் திருவாசகமணி திரு. **கே. எம். பாலசுப்பிரமணியம்** பி.ஏ., பி.எல்., அவர்கள், "Put your trust in God but keep your powder also dry" என்று **ஆலிவர் கிராம்வெல்** என்னும் பெருவீரன் கூறியதனைக் குறிப்பிட்டு ஓர் அரிய இனிய சொற்பொழிவாற்றினார்கள். அறங்காவலர் திரு. அய்யா சுப்பிரமணிய முதலியார் அவர்களின் புதல்வன் திரு. **முருகப்பன்** என்னும் இளஞ்சிறுவன் தேசப் பாதுகாப்புக்குத் தன் காணிக்கையாக 101 வெண்பொற்காசுகளை அமைச்சரிடம் வழங்கினான். அறநிலைய ஆணையர், துணை ஆணையர், உதவி ஆணையர், முதலிய பெருமக்கள் பலரும் இந் நிகழ்ச்சியிற் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

---

**சென்னை—குயப்பேட்டை :** கந்தப்பெருமானார் ஆலயத்தில் 15—10—62 சனிவாரம் விசயதசமி தினத்தில் புலவர் திரு. பூ. சமரபுரி முதலியார் அவர்களால் தொடங்கி நடத்தப் பெற்றுவந்த திருவாசக விரிவுரை நிறைவுவிழா 20—10—62ல் நடைபெற்றது. அவ்விழாவிற்குத் திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ., அவர்கள் தலைமை வகித்தார்கள். திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை, பி.ஏ., எல்.டி., அவர்கள் பாராட்டுரை வழங்கினார்கள்.

**சுவாமிமலை :** சுவாமிநாதசுவாமி கோயிலில் கந்தர்சஷ்டி விழா 28—10—62 முதல் 8—11—62 வரை நடைபெறும்.

**சென்னை—வன்னியதேனும்பேட்டை.** பாலசுப்பிரமணியசுவாமி கோயிலில் இது காறும் தொடர்ந்து "திருமுருகாற்றுப்படை" விளக்கவுரை நடத்திவந்த திரு. கி. வா. ஜகந்நாதன், எம்.ஏ., அவர்களுக்கு 24—10—62ல் பாராட்டுவிழா நடத்தப்பெற்றது அவ்விழாவிற்குச் சென்னை அறநிலைய (ஆட்சி)த்துறை உதவி ஆணையர் திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள்.

**மயிலம் :** சிவசுப்பிரமணியசுவாமி கோயிலில் கந்தர் சஷ்டிவிழாச் சொற்பொழிவுகள் 29—10—62 முதல 4—11—62 வரை நடைபெறும்.

**நாகப்பட்டினம் :** சௌந்திரராஜப் பெருமாள் கோயிலில் மணவாளமா முனிகள் உற்சவம் 24—10—62 முதல் 2—11—62 வரை நடைபெற்றது.

**காஞ்சிபுரம்—குமரக்கோட்டம் :** சுப்பிரமணியப்பெருமான் கோயிலில் கந்தசஷ்டி விழா 28—10—62 முதல் 5—11—62 வரை நடைபெறும்.

**சென்னை—மைலாப்பூர் :** கபாலீசுவரர் கோயிலில் 19—10—62ல் திரு. கே. எம். பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த மாணிக்க வாசகரின் திருவெம்பாவை, ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவை இரண்டும், நூல்வடிவில் சென்னை அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்களால் வெளியிடப்பெற்றது.

**தாராபுரம் :** அகத்திசுவரர் கோயிலில் உள்ள முருகப்பெருமான் கந்தசஷ்டி விழா 29—10—62 முதல் 5—11—62 வரை நடைபெறும்.

**திருமயிலாடி :** சுந்தரேசுவரர் கோயிலில் பாலசுப்பிரமணிய சுவாமிக்குக் கந்தசஷ்டி விழா 28—10—62 முதல் 8—11—62 வரை நடைபெறும்.

**கடையம் :** வில்வவனநாதசுவாமி கோயிலில் திருக்கல்யாண உற்சவம் 25-10-62ல் நடைபெற்றது.

**திருச்சேந்தூர் :** சுப்பிரமணியசுவாமி கோயில் கந்தசஷ்டி விழா 29—10—62 முதல் 5—11—62 வரை நடைபெறும். எல்லா நாட்களிலும் சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை யரங்குகளும் உண்டு.

**மதுரை :** ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற கந்தபுராணப் பிரசங்க நிதியிலிருந்து கந்தபுராண விரிவுரை 29—10—62 முதல் 3—11—62 வரை காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகச்செயலாளர் திரு. வீ. திருஞான சம்பந்த முதலியார் அவர்களால் நாடோறும் மாலை 6-30 மணிமுதல் 8-30 மணிவரை நிகழ்த் தப்பெறும்.

**காஞ்சிபுரம் :** ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற கந்தபுராணப் பிரசங்க நிதியிலிருந்து கந்தபுராண விரிவுரை 29—10—62 முதல் 3—11—62 வரை காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., அவர்களால் நாடோறும் மாலை 6-30 மணி முதல் 8-30 மணிவரை நிகழ்த்தப்பெறும்.

**சென்னை—மயிலாப்பூர் :** ஆதிகேசவப்பெருமாள் பேயாழ்வார் சந்நிதி, பேயாழ்வார் உற்சவம் 29—10—62 முதல் 7—11—62 வரை நடைபெறும்.

**சென்னை—கந்தகோட்டம் :** ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலில் மகா கந்தர் சஷ்டி உற்சவம் 29—10—62 முதல் 3—11—62 வரை நடைபெறும்.

**மாயூரம் :** மாயூரநாதசுவாமி கோயிலில் துலா உற்சவம் 17—10—62 முதல் 15—11—62 வரை நடைபெறும்.

**திருப்பூவணம் :** புஷ்பவனேசுவரர் கோயிலில் 20—9—62-ல் 'திருவிசைப்பாக் கல்வெட்டைச் சென்னை அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் திறந்து வைத்தார்கள்.

**ஒப்பிலியப்பன் கோயில்:** ஸ்ரீநிவாசப்பெருமாள் கோயிலில் புரட்டாசி மகோற்சவம் 29—9—62 முதல் 9—10—62 வரை நடைபெற்றது.

**சென்னை—புரசைவாக்கம்;** பாதாளபொன்னியம்மன் கோயிலில் 11-ஆவது ஆண்டு நவராத்திரி விழா 29—9—62 முதல் 9—10—62 வரை நடைபெற்றது. 29..9—62-ல் சென்னை அமைச்சர் திரு. பி. கக்கன் அவர்கள் தலைமை வகித்தார்.

---

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

இதுவரை சந்தாவைப் புதுப்பிக்காத சந்தாதாரர்கள், தயவுசெய்து ரூபா 10-ஐப் பண அஞ்சல் மூலம், அவ்வவ் வட்டார உதவி ஆணையர் அலுவலகத்திற்குச் செலுத்தி, (1962 அக்டோபர் முதல் தொடங்கும்) இவ்வாண்டின் சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளுமாறு கோரப்படுகிறது.

# திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி

இசைத்தட்டுகள்

திருமதி எம். எல். வசந்தகுமாரி



| வரிசை எண். | இராகம் | பாட்டு |
|---|---|---|
| 1. | பௌளி | போற்றி என்; ஆதியும் அந்தமும் |
| 2. | கேதாரம் | அருணன் இந்திரன்; பாசம் பரஞ்சோதி |
| 3. | பிலஹரி | கூவின பூங்குயில்; முத்தன்ன |
| 4. | தேவகாந்தாரி | இன்னிசை வீணை; ஒள்நித்தில |
| 5. | யதுகுலகாம்போதி | பூதங்கள் தோறும்; மாலறியா |
| 6. | கமாஸ் | பப்பற வீட்டிருள்; மானே நீ நென்னலை |
| 7. | ரீதிகௌளம் | அதுபழச்சுவை; அன்னே இவையும் |
| 8. | தன்யாசி | முந்திய முதல்; கோழி சிலம்ப |
| 9. | நாட்டைக்குறிஞ்சி | விண்ணகத்தேவரும்; முன்னைப்பழம் |
| 10. | சுத்த சாவேரி | புவனியில் போய்; பாதாளம் ஏழினும் |
| 11. | பூரி கல்யாணி | மொய்யார் தடம் பொய்கை |
| 12. | சங்கராபரணம் | ஆர்த்த பிறவி |
| 13. | சாவேரி | பைங்குவளைக் கார்மலரால் |
| 14. | பீம்ப்ளாஸ் | காதார்குழை |
| 15. | உசேனி | ஓரொருகால் |
| 16. | அமிருதவர்ஷணி | முன்னிக்கடலை |
| 17. | வசந்தபைரவி | செங்கண் அவன்பால் |
| 18. | சாமா | அண்ணாமலையான் அடிக்கமலம் |
| 19. | ஹிந்தோளம் | உன்கையில் பிள்ளை |
| 20. | மணிரங்கு | போற்றியருளுக |

## கொலம்பியா இசைத்தட்டுகள் :

எண் : 37073 முதல் 37082 வரை

கிடைக்குமிடம் :

**சரஸ்வதி ஸ்டோர்ஸ்,**
அஞ்சற் பெட்டி எண் : 326,
2/159, மவுண்ட்ரோட், சென்னை-2.

மற்றும் அங்கங்குள்ள விற்பனையாளர்களிடமும் கிடைக்கும். இசைத்தட்டு ஒன்றின் விலை ரூபா 4-65



திருப்புகலூர் ஸ்ரீ அக்னீசுவரர் கோயில் பணியாளர்கள் குடியிருப்பு இடத்தை 26-8-'62-ல் அறநிலைய அமைச்சர் திரு. M. பக்தவத்சலம் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Administration) Department, Madras-34.
Printed at Paari Achakam, 127, Broadway, Madras-1.